தில் அனுப்பி விடுகின்றனர். முன் காலத்தில் கட்டப்பட்ட கோபுரங்களென்ன, மண்டபங்களென்ன, கல்லணைகளென்ன, இவைகளையவர்கள் எவ்வித மியற்றினார்களென்று ப்ரமிக்கும்படியாக விருக்கின்றது. இவ்விதமாக செல்வ விர்த்திக்கு வேண்டிய சாதகங்களை மறந்து செல்வக்குறைவை யடையும் தேசத்தாருமுண்டு. ஒருதேசத்துச்செல்வம் குன்றுவதற்கு வேறு காரணங்களுமில்லாற் போகவில்லை. ஜனங்கள் விரைவில் எண்ணிக்கையில் பெருகுவாராயின் தேசத்தில் சிறுவர்களும் வயோதிகர்களும் அதிகப்பட்டு வேலைசெய்யத் திறமையுள்ளவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் கிடைப்பது அரிதாகி அவர்களுடைய தேகவலிமை குன்றலாம். குழந்தைகளைச் சரிவர போஷிக்காவிடினும், ஜனங்களுக்கு பரிசுத்தமான காற்றும் தண்ணீரும் கிடைப்பது கஷ்டமாயினும், அநாகரீக வழக்கங்களினாலும், மிகுந்த குடியினாலும், அடிக்கடி கொள்ளை வியாதிகளும், பஞ்சங்களும் நேரிடுவதினாலும், ஜனங்களின் தேகவலிமை குன்றி வேலையின் பயன் குன்றும். மேற் சொன்ன கஷ்டங்களில்லாத தேசங்களில் செல்வம் விர்த்தியடையத் தடையென்ன?

T. C. வெங்கடரமணய்யர்.

---

# The New Civil Marriage Bill.

## Reasoning Round in a Vicious Circle.

## நவ நாகரிகப் புது விவாகம்.

பீஜாங்குர நியாய விசார தோரணை.

---

வித்திலிருந்து மரம் உண்டாகிறதென்று எல்லாருக்கும் தெரியும். அப்படியே மரத்திலிருந்து பழமும் பழத்தினுள் விதையும் தானே யுண்டாகிறதென்று கண்ணுள்ளோர் எல்லாரும் கண்டிருக்கிறார்கள். இவ்விரண்டையும் அறிந்த ஒரு வித்வானுக்கு மரத்துக்கு வித்துக்காரணமா? வித்துக்கு மரம் காரணமா? என்கிற ஒரு பெரிய சந்தேகம் பிறந்து விட்டது. அதைத்தீர்த்துக்கொள்ள வேணமட்டும் பரீக்ஷைகள் செய்து பார்த்தான். இவன் கேட்ட கேள்விகளுக்குத் தான் பதில் கிடைக்கவில்லை! இந்த அவஸ்தையில் அவன் யோசித்து யோசித்து அவனுக்கு மூளையுருகிப் போய்விட்டது. அப்பொழுது அவன் அயர்ந்து நித்திரை போனான். அயர்ந்து நித்திரை போகவும் உருகின மூளை மறுபடியும் தெளிந்து குளிர்ந்தது. அப்பொழுது அவன் தேஹத்திலுள்ள எழுபத்தியீராயிரம் நாடி நாம்புகள் வழியாகவும் அமிருதரஸம்ஊறி ஒன்றோடொன்று சேர கங்கைப் பிரவாகமாகப்பெருகித் தண்ணலைமோத வெண்ணிலவெறிக்க தேஹமாத்யந்தம் வீரியக்கொழுவூறி உன்முகமாய்ப் படர்ந்தது. இந்த ஊர்த்துவரேதஸானது கண்டஸ்தானத்தைக் கடக்குங்கால் வாயுமண்டலத்தில் அக்னியாதித்ய மண்டலங்களிரண்டின் ஒளிதாக்கப்பளீர் என்று ஒரு ஓசையும் மின்னலும் உண்டாயிற்று.

அது அயர்ந்த நித்ரை யிலிருந்த புருஷனுக்கு யாரோ ஒரு தேஜோ மயமான புண்யபுருஷன் தோன்றி பளீரென்று கன்னத்தில் அடித்ததுபோல் இருந்தது. அந்த அறை கன்னத்தில் பளீர் என்று விழவும் தூங்கின புருஷன் தேஹஸ்மரணை யற்றவனாய்த் தானே தூக்கம் விட்டு நெற்றிக்கண் திறக்கப் பார்த்தான். அங்கே புண்ய புருஷனையும் ஸத்யஸ்வரூபமாயும் பரபிரஹ்ம மூர்த்தியாயும் கறுப்பும் மஞ்சளும் கலந்த நீலமேக வர்ண மேனி சோபிக்க அவனது வீரியம் மேல் நோக்கிச் சென்றதனால் விரக்த வீரியனாய், ஞானக்கண் விளங்கிய விரூபாக்ஷனாய் எல்லாம் தானாய்நிற்கும் விசுவரூபியைக் கண்டு அச்சமும் அன்பும் நிறைந்தவனாய் 'நமோ நமஃ' என்று பலகாலும் விழுந்து நமஸ்கரித்துத் துதித்தான்.

ருதம் ஸத்யம் பரம்ப்ரஹம புருஷம் க்ருஷ்ண பிங்களம்
ஊர்த்துவரேதஸ் விரூபாக்ஷம் விசுவரூபாயவை
நமஃ விசுவரூபாயவை நமோநம இதி ||"

[இந்த ஸ்தோத்திரத்தின் அருத்தத்தை முந்தியே சொல்லி விட்டோமாகையால் மறுபடியும் சொல்லத் தேவையில்லை.]

இப்படி விசுவரூப தரிசனம்கண்டு விசுவரூபியாகிய பகவானையே சரணடைந்தவனாய் நிற்கப் பளீரென்று பின்னுமொருஅறை அவன் கன்னத்தில் விழுந்தது. கைகளிரண்டும் தானாகக் கன்னத்தை தடவிகொடுக்க அந்த வலி பொறுக்காமல் வித்வான் தேஹஸ்மரணையோடு விழித்துக் கொண்டு பார்த்தான்

எதிரே நின்ற புருஷனைக் காணோம். பீஜாங்குர நியாய விசாரம் தனக்குத்தானே யவனுக்கு ஸ்மரணையிலுதித்தது. இப்பொழுது வித்தையும் மூளையையும் கொண்டு பரீக்ஷைசெய்ய வேண்டுமென்கிற புத்திமட்டும் தோன்றவில்லை! அதற்கு பதிலாக தேஹேந்திரயங்களுக்கெட்டாததாய்ப் புலனறிவுக்குத் தோன்றாததாய் உள்ளறிவுக் குண்மையாயுள்ள சக்தி யொன்றிருக்கிறது என்று கண்டுகொண்டான். பீஜாங்குர நியாயவிசாரத்தின் முடிவு என்ன ஐயா? வென்று கேட்டால், பீஜத்துக்கும் (வித்துக்கும்) அங்குரத்துக்கும் (மூளைக்கும்) காரணமாய் அவைகளைத் தத்தம் வழியில் பிரவிருத்திக்கச் செய்யும் சக்தி யொன்றிருக்கிறது" என்று பதில் சொல்கிறார். அதற்கு ருஜுவெங்கே யென்றால் தன் கன்னத்தைத் தடவிக்கொண்டு "அது இருக்கிறது நிஜம்! நான் அறைபட்டதுபோல் நீயும் அறைபட்டால் தெரியவரும்! வீண் குதர்க்க வாதங்கள் செய்வதில் பயனென்ன?" என்று ஒரே தீர்மானமாய்ப் பதில் சொல்லிவிடுகிறார். இவரிடத்தில் பீஜாங்குர நியாய விசாரம் கற்றுக்கொள்வதெப்படி? அவரைப்போல் பட்டனுபவித்தால் தானே அந்த அனுபவம் சித்திக்கும். வீணான வாக்கு வாதம் செய்வதினால் பயனென்ன ? ஒன்றுமில்லை!

"பட்டால்தான் தெரியும் பார்ப்பானுக்கு!" விவாக லக்ஷியம் விளங்காத சிலரோடு வீணான வாக்குவாதம் செய்வதில் பயனில்லை. இப்பொழுது கிளம்பி யிருக்கும் "நவ நாகரிக நாதர்களான" சிலர் ஹிந்துக்களுள் நவீனமான விவாகமொன்று ஏற்படுத்தக் கருதி, பழமையான வேத ஸம்ஸ்காரார்த்தமான விவாஹத்தை விட்டுப் புதிதாய் செய்யப்படும் ஒரு சட்ட நிர்மாணப்படி, ஹிந்து மதத்தைவிட்டு விலகாமல் தானே ஜாதி வர்ணாசிரம தர்மக்கட்டுகளொன்றையும் கருதாமல் தானே யார்யாரை வேண்டுமானாலும் விவாகம்செய்து கொள்ளலாம் என்றும் அப்படி விவாஹம்செய்து கொள்கிறவர்கள் பின்னால் அந்த விவாஹத்தைக் கோர்ட்டுகளில் அதற்கான "டைவோர்ஸ் ஆக்ட்" என்கிற சட்டப்படி ரத்து செய்து கொள்ளலாமென்றும் சட்டம் செய்யக்கருதி அதற்காக இராஜப்பிரதிநிதி யவர்களுடைய சட்ட நிருபண சபையில் ஒரு மசோதா ஆலோசனைக்குக் கொண்டு வந்திருக்கிறார். கவர்ன்மெண்டார் அதை ஆலோசனைக்குக் கொண்டுவர அனுமதி கொடுத்தும் வேத ஸம்ஸ்கார்மான மத சம்பந்தப்பட்ட இவ்விஷயத்தில் அந்நிய கவர்ன்மெண்டான நாங்கள் புகுந்து சட்டம் செய்வது கூடாதென்று சொல்லியிருக்கிறார்கள். இந்தியர்கள் தாமே இந்த நவீன நாகரிக விவாகத்துக்குச் சம்மதப்பட்டவர்களா யிருக்கிறார்களென்று ருஜுக்காட்ட வேண்டி அங்கங்கே யுள்ள லாயர்களும் சீர்திருத்தக் காரர்களும் "பொதுக் கூட்டம்" கூடி ஜனங்கள் இதை யாதரிப்பதாக ஆரவாரம் செய்து வீண் ஆர்ப்பாடடப்படுத்தி வருகிறார்கள். பத்திரிகைகள் பலவும் இந்த வாயால் வல்லவர்கள் வசத்திலிருப்பதால் இப்படிப்பட்ட நூதன விவாகம் வேத ஸம்ஸ்காரமான ஸப்தபதி விவாகத்துக்கு விருத்தமானதென்று சொல்லி விவாகலக்ஷியத்தைச் சீர்குலைக்கலாகாதென்று எழுதியதற்காக அப்படியெழுதியவரைக் கண்டித்து சண்டப்ரசண்டமாய் பத்திரிகைகளுக்கு எழுதி வருகிறார்கள். பம்பாயில் ஸர் பாலசந்திரகிருஷ்ணர் அவர்கள் முதலான பிரமுகர் சேர்ந்து பொதுக் கூட்டங்கூடி இந்த மசோதா சட்டமாகக் கூடாதென்று ஆக்ஷேபித்துத் தீர்மானஞ் செய்திருக்கிறார்கள். சென்னையிலும் ஒருகூட்டம் ஆகஸ்டுமீ 26வ கூடப்போகிறதாக விளம்பரப்படுத்தி யிருக்கிறார்கள்.

"வல்லான் வகுத்தது வாய்க்கால்" என்னும் வழக்குரையை யனுசரித்து வரும் இவ்விராஜதானியில் வாயால் வல்லவர்கள் தம் கக்ஷியே பலமெனப்பேசி பஹிராடம்பரங்கள் செய்து வருகிறார்கள். இந்த ஆடம்பரங்கள் பலிக்காதபடி விவாகம் ஆத்ம ஸம்ஸ்காரம் என்று கருதுகிறவர்கள் தம் அபிபபிராயத்தையும் ஆக்ஷேபனையையும் சர்க்கார் தெரியத் தெரியப்படுத்த வேண்டும்.

பிரம்மசமாஜிகள் தங்களுக்காகவென்று ஒரு விவாக சட்டம் கேட்டபொழுது 1872-ம் வருஷம் இந்தியாவிலுள்ள மதங்களில் எதிலும் சேராத அவர்களுக்காக வென்று 1872-ம் வருஷத்தில் ஒரு "பிரத்யேக விவாக சட்டம்" செய்தார்கள். இப்பொழுது ஹிந்து மதத்திலிருந்து கொண்டே ஜாதி மத வித்யாஸங்களைப் பாராமல் எந்தஜாதி எந்த மதஸ்தனானாலும் வேறு எந்தஜாதி எந்த மதஸ்தானாலும் தனக்கு இஷ்டமான ஒருபெண்ணை தம் ஜாதிமதம் இன்னதென்று வெளியிடாமல் தானே பத்திரம் ரிஜிஸ்தர் செய்வதுபோல் விவாகத்தை ரிஜிஸ்தர் செய்துவிட்டால் அது சட்டப்படி விவாகமாக பாவிக்கப்படு

மென்கிறார். இந்தச் சட்டப்படி பிராமணனுங்கூட வேறு எந்த ஜாதியிலும் கலியாணம் செய்துகொள்ள லாம். புத்திகெட்ட ஒரு விப்ரன் அழகு பறைச்சியை ஆலிங்கனம் செய்யவிரும்பில் ரிஜிஸ்திராரிடம் போய் இரண்டு சாக்ஷிகளுடன் கையெழுத்துப் போட்டு வந்து விட்டால் அவளை பஹிரங்கமாய் தன் மனைவியென்று எங்கும் அழைத்துச் செல்லலாம். இதில் விபரீதமொன்றும் இல்லை யென்று வைத்துக் கொண்டாலும் ஆத்ம ஸம்ஸ்காரம் அல்லாத விவாஹம் அங்கீகரிக்கத் தக்கதாயில்லை. ஏனெனில் விவாக லக்ஷியத்திற்குக் குறைவு வருவதாலென்க!

———(:-o-:)———

## LALITAMBAL.

### IV. "Brahma's tie"—Settling a match.

## லலிதாம்பாள் சரித்திரம்.

IV.

### வதூவரர் நிச்சயம்.

"பிரம்மமுடிச்சு."

——:-:——

பிரஹ்மஸ்ரீ வாமதேவசாஸ்திரிகளுக்கு ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் பரகதியடைந்தது முதல் மனத்தாங்கல் அதிகமாக ஏற்பட்டது. ஸம்ஸார பாரம் அவருக்கு இப்பொழுது தான் தலையில் உறைத்தது. இதுவரையில் எல்லாம் மாமனார் பார்த்துக்கொள்வார் என்கிற தைரியம் அவருக்கு உள்ளுக்குள் மிகவுண்டு. வெளியில் கிரஹஸ்தாச்ரமதர்மத்துக்குக் குறைவு வராமல் தன் குடித்தனப் பொறுப்பைத் தான் பார்த்துக் கொள்கிறவர்போல் நடந்து வந்தாலும், உண்மையில் இவருடைய குடித்தனப் பொறுப்பை யெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் தானே வகித்துவந்தார். இப்பொழுது வாமதேவ சாஸ்திரியார் தான் நிராதாரமாய் நிற்கக்கண்டார். சிறு வயதிலேயிருந்து குடித்தனத்திலடிபட்டவர்களுக்கு குடித்தனப்பொறுப்பைத் தாங்குவது நாளடைவில் சகஜமாகப் போய்விடும். "குடித்தனமோ துரைத்தனமோ!" என்கிற பழமொழிப்படி, ஒரு குடித்தனத்தைத் தாங்கி அதை முன்னுக்குக் கொண்டு வரும் பொறுப்பானது உண்மையில் ஒரு ராஜாங்கத்தை நடத்தும் துரைத்தனப்பொறுப்புக்குச் சமானமானதா யிருக்கிறது. ஒரு துரைத்தனத்தை நடத்துவதற்கு வேண்டிய சமயோசித சாமர்த்தியமும் பாரதூர யோசனையும் வேண்டும் ஒரு குடித்தனத்தைச் சரிவா நடத்துவதற்கு. அதில் உண்டாகும் கவலைகளும் விசாரங்களும் மெத்தவுண்டு. இவைகளை யெல்லாம் அனுபவ ஞானத்தாலும் நல்ல பழக்க வழக்கங்களால் திடப்பட்ட மனத்தினாலும் சில்லரைத் தொந்திரவுகளைப் பொறுத்துச் சமாளிக்கும் சாமர்த்தியத்தினாலும் தாங்கி நிர்வகித்தால் நிர்வகிக்கலாமே யன்றி மற்றப்படி நிர்வகித்தல் மிகவும் கஷ்ட சாத்தியமாம். வாமதேவசாஸ்திரிகளுக்கு இந்த சாமர்த்தியமொன்றுமில்லை யென்று நாம் சொல்லத் தேவையில்லை. ஆகையால், அவர் மாமனார் காலகதியாகவும் குடும்பவிசாரம் தலைக்கேறினவராய் "மனக்கவலை பலக்குறைச்சல்" என்றபடி கவலை மேற்கொண்டு பலக் குறைவுற்றிருந்தார்.

இந்த சமாசாரம் தஞ்சாவூரில் வாழ்ந்து கொண்டிருந்த பார்வதியம்மாளுக்கு எட்டியது. "செல்லப்பெண் வாலாம்பாள்" மன உத்ஸாகம் குறைந்து தன் பிதா போனது முதல் ஏக்கம் பிடித்துப்போனாள். ஒவ்வொரு சமயம் அவளுக்கு துக்கம் பொறுக்கமுடியாத பொழுது வாலாம்பாள் பலாக்கணம் பாடி அப்பாவுக்கு அழுது கொண்டிருப்பள்.

"மடியிற்கிளிவளர்த்துதரையில்விட்டுப்பார்த்தாப்போல்
சீருடனேவளர்த்தென்னைச் சிரிப்பாணி சண்டாயே!"

என்று தெய்வத்தை நொந்துகொண்டு அப்பாவை நினைத்து நினைத்து விம்மி அழுவள். இவள் என்ன அழுதாலும் மாண்டவர் வந்து இவளைத் தேற்றவில்லை. ஏனெனில் வாலாம்பாள் சுபாவமாகவே கோழைமனதுடையவள். பார்வதியைப்போன்ற மனோதீரமும்

திடமும் இவளுக்கில்லை: உண்மையான பக்தி சிரத்தையும் இன்னம் உதிக்கவில்லை. அப்பா போனது முதல் தன்னைச் செல்வமாய் நடத்த யாருமில்லாமையால், தானிருந்த இருப்பையும் இப்பொழுதிருக்கும் கதியையும் நினைத்து துக்கித்தாள். அவள் அப்பாவை நினைத்துக்கொண்டு அழுதாலும், தன்னுடைய செல்வம் சீர் இவைகளுக்குக் காரணமாயிருந்த அவர் போய்விட்டதால் தனக்குக் குறை நேர்ந்ததென்றுன்னி துக்கம் மேற்கொண்டு அது தாங்க மாட்டாமல் அழுதாளேயன்றி, உள்ளன்பு காரணமாக அப்பாவின் பிரிவாற்றாமல் அழுதவளில்லை. ஆகையால் தான் அவளுக்குத் தேறுதல் ஒன்றும் தோன்றவில்லை. அழுதழுது உடம்பு துரும்பாகப் போய்விட்டது. வாமதேவ சாஸ்திரிகளுக்கு குடித்தனத்தை வகிக்கும் சாமர்த்தியம் போதாதென்கிற எண்ணத்தோடு அவருக்கு தேஹம் வரவர சௌக்கியங்குன்றிவருகிற விசாரமும் அவளை ஒரு பக்கம் பாதித்தது. அவருக்கு மனதிலுண்டான சோகம்முற்றி அது தேஹத்தில் சோகை வியாதியாகத்தென்பட்டது. இந்த சமாசாரமெல்லாம் தாயார் ருக்மணியம்மாள் சொல்லியனுப்பப் பார்வதிக்குத் தெரியவந்தது. பார்வதி புருஷனை தண்டநாதையர் கரூரில் முனிசீபாயிருந்தாரென்று சொன்னோம். அவர் அதற்குமுன் தென்தஞ்சைக்கோர்ட்டில் பெரிய சிரஸ்தாராயிருந்தார். அவருக்குத் தஞ்சாவூரில் வீடு மனை வாசலெல்லாம் உண்டு. பார்வதியம்மாள் கோடை ரஜாவுக்குத் தன் புருஷனோடு கூட தஞ்சைக்கு வந்திருந்தாள். வந்திருந்த சமயத்தில் தன் தங்கையின் குடும்ப சமாசாரங்களைக் கேள்விப்பட்டு வருத்தப்பட்டாள். அப்பொழுது அவளுக்குத் தன் தகப்பனாருடைய அத்தியாவஸ்தையில் நடந்தவைகளெல்லாம் ஞாபகத்துக்குவர, என்னதான் புத்திசாலியும் திடநெஞ்சுடையவளுமாயினும், தகப்பனாருடைய ஞாபகம்வர அவளுக்கு நெஞ்சுருகிப்போய்விட்டது. உட்கார்ந்து கொண்டிருந்தவள் உட்கார்ந்தபடியே மூர்ச்சித்துப் போய்விட்டாள். மூர்ச்சை தெளிந்துங்கூட அவள் வாய்விட்டொன்றும் சொல்லாவிட்டாலும்; கண்ணால் தாரை தாரையாக கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தாள். அவள் மூர்ச்சித்திருந்தபொழுது அவளுடைய தகப்பனார் தன்னைக் கூப்பிட்டுத் தன்மாரில் வைத்திருந்த குழந்தையைத் தூக்கி யவளிடம் கொடுத்து"பார்வதி! குழந்தைபத்திரம்! பத்திரம்!" என்று பத்திர புஷ்பம் சமர்ப்பிப்பதுபோல் அக்குழந்தையைத் தன்னிடம்ஒப்புவித்த அவர் குரல் அவளுக்கு நிஜமாகவே காதில் நன்றாகக் கேட்டது. அப்பா குரல் கேட்டதும் அவள் மூர்ச்சை தெளிந்து அப்பாவைப் பார்க்கலாமென்று விழித்துக் கொண்டாள். அப்பாவின் திருவுருவைக்காணாமல் அவருடையகண்டத்வனிமாத்திரம் நாதாகாரமாய் அவளது உட்செவியில் ரீங்காரம் செய்துகொண்டிருக்கக்கேட்டாள். இதையெல்லாம் நினைக்கவும் அவளுக்குத் தன்னால் கண்ணீர் சொரியத் தொடங்கியது. தான் துக்கப்படுவது தன் புருடனுக்குத் தெரியக்கூடாதென்று அதை யடக்கிப்பார்த்தாள். முடியவில்லை! தாளமுடியாத காரியத்துக்குத் தெய்வமே துணையென்று தெய்வத்தின்மேல் பாரத்தைப் போட்டுவிட்டுக் கண்ணீர் ஆறாகப் பெருகத் தான் பொற்பதுமைபோல் உட்கார்ந்திருந்தாள். கூடவிருந்த பெண்பிள்ளைகள் ஒன்றும் ஆறுதல்சொல்ல நாவெழாமல்,'எஜமானி'யென்கிற பரிபாதையினால் எட்டியிருந்து மிகவும் அனுதாபப்பட்டார்கள். கடைசியில் அந்தவீட்டில் வெகுநாளாய் வேலைபார்த்துக் கொண்டிருந்து எல்லாராலும் விசேஷமாய் மதிக்கப்பெற்று "அம்மாமி" யென்கிற பட்டப்பேரும் பெற்ற பெரியகிழவி கிட்டநெருங்கி, "அம்மா! பார்வதி! இப்படித்தான் அழுவாளா அம்மா! ஐயோ! முந்தானியெல்லாம் நனைந்து போய்விட்டதே! வெள்ளம் கரைகடந்தால் யார் யாரை விழுங்குமோ! இப்படி அழுகலாமா

அம்மா!" என்று மிக்கபரிவோடு அவள் முந்தாணியில் விழுந்திருந்த கண்ணீரைத் துடைத்து அம்முந்தாணியினலேயே அவள் கண்களையும் துடைத்தாள். 'அம்மாமி! என்னையறியாமல் இன்றைக்கு துக்கம் கரைகடந்த வெள்ளமாய்த் தானே வந்துவிட்டது! அடக்கிப்பார்த்தேன்! முடியவில்லை! நான் என்னசெய்வேன்!" என்று சொல்லி ஒருவாறு தன்னைத் தானே தேற்றிக்கொண்டாள். பார்வதி கண்களைத் துடைத்துக் கொண்டு துக்கத்தினல் அடைபட்டிருந்த நெஞ்சைத் திருத்திக்கொள்ளவேண்டி மெதுவாய் கனைத்துக்கொண் டிருக்கையிலேயே, "அம்மாமிப்பாட்டி" "ஆம்! அம்மா! அடக்கமுடியாத துக்கம் வந்துவிட்டால் ஆர்தான் என்னசெய்யலாம்! நீ புத்திசாலியானதால் வாய்திறவாமல், வீட்டில் புருஷாள் காதில் படாமல் அமைதியாய் உன் துக்கத்தை வெளியிட்டாய்! உன்தங்கை வாலாம்பாள் நினைத்து நினைத்து அப்பாவுக்கு பிலாக்கணம் பாடியழுகிறுள்! உடம்பு துரும்பாகப் போய்விட்டதென்று உன்தாயார் ருக்மணியம்மாள் அவளைப்பற்றிப் பெரு விசாரப்படுகிறுள்! என்னமோ பகவான்போல் ஒரு தகப்பனுரிருந்தார்! அவர் ஞாபகம் வந்தால் யார்தான் அழமாட்டார்கள்!'—என்று உபசாரம் சொன்னுள்.

"அம்மாமி! அதற்காகக்கூட நான் அவ்வளவு துக்கிக்கவில்லை. அப்பா போகும் பொழுது என்னைப் பேர்சொல்லி யழைத்துப் "பார்வதி குழந்தை பத்திரம்! பத்திரம்!" என்று என்னிடம் பத்திரபுஷ்பம் சமர்ப்பிப்பதுபோல் குழந்தையை ஒப்புவித்துவிட்டுப் போனுரே! நான் பாவி அப்பொறுப்பை வகித்து நிறைவேற்றும விருக்கிறேனே! குழந்தை குப்புவுக்குக் கன்யாதானம் செய்யும் வயதாய் விட்டதென்று நல்ல வான்கிடைக்காமல் அவள் தாயார் தகப்பனுர்கள் ஏங்கிப்போயிருக்கிறுர்கள்! நான் எங்கேபோய் வரன் தேடுவேன்! அந்தக் குழந்தையை நல்ல விடம்பார்த்து உடமைக்காரன் யாரோ அவனையறிந்து அவனிடத்தில் அவனுடைமையை ஒப்புவிக்க வேண்டுமே! அவன் எங்கே யிருக்கிறுனே! யாரோ! எப்போ வருவானே! நான் எங்கேபோய்த் தேடுவேன்! இந்தப் பெரிய பொறுப்பை நினைத்துக்கொண்டால் எனக்கும் மனது திக்பிரமை கொள்கிறதே! நான் என்ன செய்வேன் அம்மாமி! பகவான்தான்வந்து எனக்கு வழி காட்டவேண்டும். நான் என்னசெய்வேன்!"—என்று தன் உள்ளக் கவலையை வெளியிட்டுச் சொன்னுள் பார்வதி.

"அதற்கென்ன! பிரம்மா எற்கனவே ஒரு முடிச்சு முடிந்து தானே போட்டிருப்பன்! காலம்வந்தால் தானே அவனும்வருகிறுன். விடிய விடிய இன்னம் குழந்தைக்கு 8-வயதாகவில்லை! அதற்குள் என்ன அவ்வளவு விசாரம்?" என்றுள் அம்மாமிப் பாட்டி. "அப்படியில்லை, அம்மாமி! பெண்ணுக்குத் தகப்பனுர் சாஸ்திரம் படித்தவரா யிருப்பதனுல் தக்கபருவத்தில் குழந்தையைக்கன்யாதானம்செய்துகொடுக்க வேண்டுமென்று கவலைப் படுகிறுர். அது நியாயந்தானே! இக்காலத்தில் இங்கிலீஷ் படித்தவர்கள் தான் பெண்ணைப் பன்னிரண்டு பதின்மூன்று வயது வரையில் வைத்துக்கொண்டு தக்கவரன் அகப்படாமல் அலைகிறுர்கள். வைதீகனும் அப்படியிருந்தால் கட்டிவருமா? குழந்தையைத் தக்க பருவத்தில் தானே கன்யாதானம் செய்துகொடுத்து விட்டால் நல்லதென்று தான் நானும் நினைக்கிறேன்! நல்லவரன் கிடைக்கவேண்டுமே யென்றுதான் விசாரமாயிருக்கிறது!" என்றுள் பார்வதி.

"உனக்கும் அப்படியே இஷ்டமிருந்தால் இதற்கு விசாரமென்ன! உன்னுடைய மாமியாருக்கு மருமான் லக்ஷ்மிகாந்த னிருக்கிறுனே இல்லையோ! அவனுக்கு ஒரு மைத்துனனிருக்

கிறான். தங்கக் கொடிபோல் வளர்ந்திருக்கிறான். இரண்டு பரீக்ஷை கொடுக்கும்வரையில் படித் திருக்கிறான். பிள்ளை பரமசாது! இங்கே வந் தால் ஒரு சேஷ்டை செய்யாது. ஏதோ சோற் றுக்குத் துணிக்கு மிருக்கிறது. அவனைவிட நல்லவன் எங்கே போய்த் தேடிப்பார்க்கப் போகிறாய் நீ! கையில் வெண்ணெயை வைத் துக்கொண்டு நெய்க் கழுவானேன்!" என்றாள் அம்மாமிப் பாட்டி.

"ஆமா, அம்மாமி! எனக்கு ஞாபகமே யில் லாமற் போய்விட்டது! நல்லசமயத்தில் ஞா பக மூட்டினீர்களே! அந்தப் பையன் இங்கே தஞ்சாவூரிலேதான் படித்துக்கொண் டிருக்கி றானென்று கேள்வி. பள்ளிக்கூடம் இன்னம் சாற்றவில்லையே! இங்கே யிருந்தால் லக்ஷ்மி காந்தனோடு சொல்லி அவனை வரவழைக்கச் சொல்ல வேண்டும்!" என்றுசொல்லிப் பார் வதி வாய்மூடுமுன், அவளோடுட்கார்ந்துகொண் டிருந்த அவள் ஓர்ப்படியார் பார்த்து "நமது லக்ஷ்மீகாந்தன் மைத்துனனு! அதாவது திரு வையாறு மீனாக்ஷியம்மாள் பிள்ளைதானே! அதோ வாசலோடு போகிறான் பாருங்கள்! அம்மாமி, நீங்கள்தான்போய் அந்தப்பையனைக் கூப்பிடுங்களேன்!" என்றாள்.

பார்வதியம்மாள் "யார்! அந்தப்பிள்ளையா! அம்மாமி, கூப்பிடுங்கள்! கூப்பிடுங்கள்!! இது ஒரு நல்ல சகுனம்தான். அவனுக்கு ஆயுஸ் நூறுதான்! சந்தேகமில்லை!" என்றாள்.

அம்மாமிப் பாட்டி வயது சென்றவளானு லும் நன்றாக வேலைசெய்து தேஹம் கெட்டிப் பட்டவள். 50-வயதுக் கிழவி யானாலும் அவள் 10-வயதுக் குழரிபோல் குடு குடுவென்று வாசலில் ஓடி வந்து தெருவோடு போன பிள் ளையைப் பார்த்து, "அடே பையா! அடே அப்பா! ஏ! மீனாக்ஷி பிள்ளை, உன்னைத்தானடா கூப்பிடுகிறேன்! இங்கே வா! வா!" என்று கையைக் காட்டியும், வாயால் கூவியும் அழைத் தாள்.

பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த அப்பையன் வாலிப தசை யடைந்தவனுதலால் நம்மை யார் கூப்பிடுகிறது! இந்தப் பாட்டி யாரோ! இவள் நம்மையேன் கூப்பிடுகிறாள்? வேறு யாரையோ கூப்பிடுகிறாள்! நமக்கென்ன! வென்று அவளைத் திரும்பிப் பார்த்துவிட்டு ஏதும் பதில் சொல்லாது அவன் வழியைப்பார் த்துக் கொண்டு போய்விட்டான்.

அம்மாமிப் பாட்டி, உள்ளே வந்து, நான் அந்தப் பிள்ளையைக் கூப்பிட்டேன்; அவன் திரும்பிப்பார்த்து விட்டு யாரையோ கூப்பிடு கிறாளென்று நினைத்துக்கொண்டு பேசாமல் போய் விட்டான். லக்ஷ்மிகாந்தனுக்குச் சொல் லியனுப்பி அவனை வரவழைக்கச் சொன்னாற் போகிறது! என்றாள். பார்வதிக்கு ஓர்ப்படி யாரான கமலாம்பாள், "லக்ஷ்மீகாந்தனால் ஒன் றும் சாயாது. நான் அந்தப்பிள்ளை தாயார் மீனாக்ஷியம்மாளுக்குச் சொல்லியனுப்புகிறேன். அந்தம்மாளோடு பேசினால் காரியம் சாயுமே யன்றி, லக்ஷ்மிகாந்தனோடு பேச்சுக் கொடுத் தால் காரியம் கெட்டுப்போம். அவனுக்கும் அந்தப் பையனுக்கும் அதிகமா யொற்றுமை யில்லை யென்று எனக்குத்தெரியும். இவன் ஏதாவது சொல்ல அவன் முரண்டு கொண் டால் பின்னர் சரிப்படுத்துவது கஷ்டம். சும்மா விருங்கள், நான் சரிப்படுத்தி வைக்கிறேன். இப் பொழுது மாசிமாசத்தில் என்ன செய்யப் போகிறீர்கள். கிணற்று ஜலத்தை வெள்ளங் கொண்டுபோய் விடுமா?" என்றாள்.

அதற்குள் பார்வதியம்மாள் பிள்ளை சோம சுந்தரம் அங்கேவர, அவன்: "யார்! நம்முடைய லக்ஷ்மிகாந்தன் மைத்துனன் தானே? அவனை எனக்குத் தெரியுமே! அவன்பேர் ஆத்மநாதன். அவனுக்கு இப்பொழுதுதான் எப். ஏ. பரீக்ஷை தேறினதாக சமாசாரம் வந்தது. அதற்காகத் தான் திருவையாற்றிலிருந்து வந்து 'காலேஜ் ப்ரின்ஸிபால்' வீட்டுக்குப்போய் விட்டுத் திரும்

பிப்போகிருன். மேலே பி. ஏ. க்குப் படிக்க பட்டணம் போகப் போகிறதாகக் கேள்வி. அவன் குப்புவுக்குப் புருஷனுகக் கிடைத்தால் நல்ல அதிர்ஷ்டந்தான்'' என்ருன்.

"அப்பா சோமு அவனைக்கண்டால் இங்கே யழைத்து வருகிருயா? நமது குப்புவை அவனுக்குக் கொடுக்கலாமென்று இப்பொழுதுதான் வாய்திறந்து சொன்னுள். சொல்லி வாய்மூடுமுன், அவனும்வாசலில் போனுன். நீயும் தெய்வவாக்குப்போல், அவன் நல்லவரன் என்று சொல்கிருய்! அவனைக் கண்டால் அழைத்து வருகிருயா!'' என்ருள் பார்வதி.

"அவனை இதற்கென்று கூப்பிட்டால் வரமாட்டான். அதிக சங்கோசி. ஆனுல் வேறு முகாந்தரம் சொல்லி யழைத்து வருகிறேன். அவன் இங்கேதா னிருக்கிருனே நேரத் திருவாதிக்கே போய்விட்டானே! விசாரித்துச் சொல்லுகிறேன்'' என்ருன் சோமசுந்திரம்.

இப்படியாகக் கலியாணம் செய்துகொள்ளப் போகிற பிள்ளைக்கும் பெண்ணுக்கும் தெரியாமல், அவர்களிருவருக்கும் பிரம்மா முடிந்து போட்ட முடிச்சைக் கண்டுபிடித்து விட்டதாக இந்தப் பெண்பெண்டாட்டிகள் தங்களுக்குள் தீர்மானித்துக்கொண்டு உடனே யொரு மான ஸீகக்கோட்டைகட்டி அதில் வதுவரர்களை யமர்த்தி யாருமறியாமல்'வதூவரன் நிச்சயம்'செய்து விட்டார்கள். பிரம்மாபோட்ட முடிச்சாம்! அதை யாரால் அவிழ்க்க முடியும்! பிரம்ம முடிச்சை யவிழ்த்தாலும் அவிழ்க்கலாம். விவாக முடிச்சுப் போடுவதில் சமர்த்தர்களான நமது தாயார், அத்தை, பாட்டிகள் முதலான பெண்பெண்டாட்டிகள் போடும் முடிச்சை யவிழ்ப்பது அசாத்தியமே யென்று பிள்ளை குட்டிகளைப் பெற்றுக்,கொண்டு கொடுத்து சம்பந்தம் செய்தனுபவப்பட்ட எல்லாரும் ஒரு மனதாய் ஒப்புக் கொள்வார்கள்.

வேலிக்கு ஓணுன் சாக்ஷியென்பதாக பிரம்மா இவர்களுக்கு நல்ல உடந்தையாக ஏற்படுகிருன்! உண்மையாகவே பார்த்தால் வதுவரநிச்சய விஷயத்திலும் பிறகு நடக்கும் கலியாணத்திலும் தேட்டாமைக்காரன் மேலுக்குப் பகட்டாய் அதிகாரம் செய்கிருனேயன்றி உண்மையில் நடப்பதெல்லாம் இரண்டாங்கட்டில் கொலுவிருக்கும் அம்மன்கள் நிச்சயித்தபடி நடக்கிறதேயன்றி வேறல்ல.

தேட்டாமைக்காரர்களான புருஷர்கள் முன்னின்று காரியத்தை நடத்திவைக்க வேண்டியது! அகத்துக்காரிகள் உள்ளிருந்தபடியெல்லாவற்றையும் சட்டதிட்டமாய்த் தீர்மானித்துத் தீர்ப்புச்செய்து பிரம்மா முன்னிலையில் கொண்டுபோய் அதை ரிஜிஸ்தர் செய்து வைத்துவிட்டு வந்துவிடுகிருர்கள். அப்படி ரிஜிஸ்தரான தீர்ப்பை மாற்ற மனுஷர்களாலாவது புருஷர்களாலாவது முடியுமா? முடியாது! முடியாது!! முடியாது!!!.

——(:-o-:)——

# FREE FROM BONDS.

## The Autobiography of a Taluk Gumastah.

(Special for the Vivekachintamani)

## * அவிழ்த்துவிட்ட கழுதை.

ஒரு தாலூகா குமாஸ்தாவின் சரித்திரம்.

(விவேகசிந்தாமணிக்கென்றெழுதப்பட்டது.)

### III—கௌமாரம்: உத்தியோகம்.

——:(o):——

(142-வது பக்கத் தொடர்ச்சி)

"செத்தால் தெரியும் செட்டியார்வாழ்வு'' என்று உத்தியோகஸ்தருடைய வாழ்வெல்லாம் செத்த பிறகு தான் வெளிப்படும். தற்காலத்தில் பணத்தைச் செலவழித்துப் படித்து உத்தியோகத்திற்கு வந்தவர்களில் நூற்றில் நாலைந்து பேர் தாங்கள் செலவழித்த பணத்தைத் திரும்பவும் சம்பாதித் திருப்பார்கள் என்று நம்பலாம். மற்றவர்கள்கதி கைப்பொருளைக் குளத்தில் எறிந்துவிட்டுச் சல்லடைப்போட்டுச் சலிப்

பவன் கதியே. இப்படி சம்பாதித்தவர்களில் பொய்யான யோக்கியதை பாராட்டாமல், சம்பாதிப்பதற்காகத்தான் உத்தியோகம் செய்கிறதென்று வெளிப்படையாக ஒப்புக்கொண்டு நடந்தவர்கள் எனக்குத்தெரிந்து இரண்டுபேர்களுண்டு. ஒருவர் ஒருபோலீஸ் இன்ஸ்பெக்டர். அவர் ஒரு கொலைக்குற்றத்தில் 10,000 ரூ. லஞ்சம் வாங்கிக்கொண்டு குற்றவாளியைத் தப்புவித்தார். பிறகு இவர் லஞ்சம் வாங்கினரென்பது கச்சேரியில் ருசுவாகிவிட்டது. அப்பொழுது அவர் தான் லஞ்சம் வாங்கினதைக் கச்சேரி முன்பாக ஒப்புக்கொண்டு சம்பாதிப்பதற்காகத்தான் தனக்கு உத்தியோகம் தேவை என்றும், தனக்கு வேண்டியதை சம்பாதித்துக் கொண்டாகி விட்டபடியால், தான் இனி 3 வருஷம் ஜயிலிலிருந்துவிட்டுப் பிறகு குடியும் குடித்தனமுமாய்ப் பெண்டாட்டி பிள்ளைகளுடன் சுகமாயிருக்கப் போகிறதாகவும் சொன்னர்.

இன்னொருவர் ஒரு மாஜிஸ்ட்ரேட். அவரிடத்தில் ஒரு பொய்ச்சாக்ஷிக்குற்றம் விசாரணைக்கு வந்தது. குற்றவாளியின் பேரில் குற்றம் ருசுவாகிவிட்டது. அவனை மாஜிஸ்ட்ரேட் 3 வருஷங் காவலில் வைப்பதாக உத்தேசித்திருந்தார். அப்பொழுது குற்றவாளி தன்னை அபராதத்துடன் விட்டுவிட வேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொண்டான். அவரும் அப்படியே அவனுக்கு 200 ரூ. சர்க்கார் அறிந்த அபராதமாகவும் 1000ரூ. சர்க்கார் அறியாத ரஹஸ்ய அபராதமாகவும் விதித்து அவனைச் சிறைக்குப் போகாமல் தப்புவித்தார். தான் அம்மாதிரி செய்ததற்குப் பின் வருமாறு காரணம் சொன்னர்: "குற்றவாளியைச் சிறைக்கு அனுப்பவதனல் அவனுடைய பொய் சொல்லுங்குணம் மாருது. சிறைச்சாலைக்குப்போன பின் மானம் அவமானமிழந்து திருடவும் கொள்ளையடிக்கவும் ஆரம்பிப்பான். ஆனல் 1200 ரூ. நஷ்டம் வைத்தால் அதைக்கொடுக்க அவனுக்குச் சக்தியுமுண்டு. இனி இம்மாதிரி திரவிய நஷ்டத்துக் குள்ளாகக் கூடாது என்கிறபயமு மிருக்கும். 1200 ரூபாயையும் சர்க்காருக்கே கொடுத்து விடவேண்டிய அவசியமென்ன? சர்க்கார் ஏழையல்லவே? ஏழையாகிய என் குடும்பம் பிழைக்க அதில் பெரும் பாகத்தை எடுத்துக்கொண்டு சர்க்காருக்கும் வஞ்சனை செய்யாமல் 200 ரூ. கொடுத்துவிட்டேனல்லவா" என்ருர். உத்தியோகஸ்தனுக்கு வேண்டிய யோக்கியதை ஒன்றும் என்னிடத்திற் கிடையாது. நான் கறுப்பாய் மெலிந்து குள்ளனயிருப்பவன் என் உருவத்தைக்கண்டு யாரும் என்னை மதிக்கமாட்டார்கள். வெகு பேர்கள் உருவத்தினலேயே உத்தியோகம் செய்கிருர்கள். ஒரு தாசீல்தார் கன்னம் நிறைய மீசை தாடியும் கோபுரத்தை யொத்த சிவப்பு ஜரிகைத் தலைப்பாகையும் நாற்காலி யிலடங்காத பருத்த சரீரமும் நிஜார் சீமைஜோடு முடையவர். புதிய குமாஸ்தாக்களை முதல் இரண்டு மூன்று நாளைக்கு விழித்துப் பார்ப்பார், அதட்டிப் பேசுவார். அவரிடம் கையெழுத்துக்குக் காகிதம் கொண்டுபோனல் கையெழுத்துப் போடவேண்டிய இடத்தை நீலவர்ணத்தினல் குறிப்பிட்டிருக்க வேண்டும். அவருடைய கோபத்துக்குப் பயந்ததுபோல் காண்பித்துக் கொண்டு அவர் கேட்குங் கேள்விகளுக்குத்தியங்காமல் ஏதாவது பதில் சொல்லிவிட்டால் அவன் தான் வேலை தெரிந்த குமாஸ்தா. ஒரு தடவை கையெழுத்துக்குக் காகிதம் கொண்டுவந்த குமாஸ்தாவை "இதென்ன காகிதம்" என்ருர். "இது பம்பாயில் புதிதாய் காகிதசாலை ஏற்படுத்தி யிருக்கிருர்கள். அதில் கோரைப்புல்லினல் காகிதம் செய்கிருர்கள். அங்கிருந்து மாதிரிக்காக ஒரு காகிதம் வந்தது அதுதான் இது. அதனல் கோரைக்காடுகளில் கோரைப் புல்லறுப்பவர்களுக்கு வரிபோட உத்தரவாகியிருக்கிறது." என்று குமாஸ்தா சொல்லி முடிப்பதற்குள். மேல் ஐந்தாறு காகிதங்களுக்குக் கையெழுத்துப் போட்டாகிவிட்டது.

கக்ஷிக்காரர்களைக் கச்சேரிக்கு வர வழைக்கும் ஸம்மன் உத்தரவுகளுக்கு இவரிடம் அடிக்கடி கையெழுத்து வாங்கத்தொந்திரவு படாமலிருக்கும்பொருட்டு பெயர் ஊர் தேதி ஒன்றும் பூர்த்திசெய்யாத அச்சிட்ட ஸம்மன் காகிதங்களை அடியில் வைத்து இருக்கும். மேலே இரண்டொரு ஸம்மன் காகிதங்களுக்கு மட்டும் பெயர் ஊர்தேதி எல்லாம் பூர்த்திசெய்து கையெழுத்துக்கனுப்பி விட்டால், எல்லா ஸம்மன் காகிதங்களுக்கும் கையெழுத்தாகி வந்து விடும். பிறகு நமக்குத் தேவையான கக்ஷிக்காரர்களின் பெயர் ஊர் தேதி எல்லாம் பூர்த்திசெய்து ஸம்மன்களை நமக்கு இஷ்டப்பட்ட காலத்தில் இஷ்டப்பட்ட பேர்வழிகளுக்கனுப்பலாம்.

நான் ஒருநாள் ஆற்றங்கரையி லிருந்து ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பிப்போகையில் ஒரு குத்திரப்

பையன் தன் தாயைக் கூப்பிட்டு என்னைக்காட்டி "அம்மா அதோ ஒரு பார்ப்பான் போகிறான், நம்முடைய மாமனைப்போலவே யிருக்கிறான் பார்" என்று என்காதில்படச் சொன்னான். நல்லவேளையாய் என் மார்பில் பூணூல் இருந்தது.

நானாகச் சிரிக்கும் வேளைகளில் தவிர சாதாரண காலங்களில் என்முகம் அழுவதுபோலிருக்கும். என் உபாத்தியாயர்களில் ஒருவர் என்னை "மழுங்கின மாங்கொட்டை" என்றழைப்பது வழக்கம். நான் பள்ளியில் படிக்கும்பொழுது ஒரு நாள் காவேரிப் பாலத்தில் நின்றுகொண்டு கீழ்நோக்கிப் பிரவாகத்தைக் கவனித்துக்கொண் டிருந்தேன். அடுத்த பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களில் ஒருவர் அவ்வழியே போனவர் என்னைப் பார்த்து "கணக்குப் பரீக்ஷையில் நீ சரியாய் எழுதவில்லையோ? வருத்தப்பட்டுக்கொண்டு தனியே நிற்கிறாயே" என்றார். (அப்பொழுது மெட்ரிகுலேஷன் பரீக்ஷை நடந்துகொண்டிருந்தது. கணக்குப்பரீக்ஷைக் கேள்விகள் கடினம் என்று சொல்லிக்கொண் டிருந்தார்கள்.) நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. பிறகு அவ்வுபாத்தியாயர் ஒரு போலீஸ் சேவகனைக் கூப்பிட்டு என்னைக் காட்டி "அந்தப் பையனைக் கவனித்துக்கொள். காவேரியில் விழுந்துவிட யோசிப்பவன்போ லிருக்கிறான்" என்று சொல்லிப் போனார்.

நான் கச்சேரிக்குப்போகும் வேளை தவிர மற்ற வேளைகளில் சட்டைபோட மாட்டேன். ஒரு தரம் தஞ்சாவூரில் ஒரு போலீஸ்சேவகன் என்னைத் தெருவில் அசுத்தம் செய்ததற்காகப் பிடித்துக்கொண்டு ஊர் பெயர் தொழில் விலாஸமெல்லாம் விசாரித்தான். நான் எல்லாம் ஒழுங்காகச் சொன்னேன். "அப்படியானால் நீர் தாலுகா குமாஸ்தாவா?" என்றான். (அதுவரையில் என்னை "நீ" என்று ஏகவசனமாகவே பேசினான்.) "ஆம்" என்றேன் "உம்முடைய உடுப்பு எங்கே?" என்றான்.

"நான் இப்பொழுது முண்டமாயில்லையே, உடுத்துக்கொண்டுதா னிருக்கிறேன்" என்றேன்.

"உம்முடைய உத்தியோக உடுப்பு எங்கே?" என்றான்.

"எங்கள் இலாகாவில் குமாஸ்தாக்களுக்கு உடுப்புக் கொடுக்கிறதில்லை" என்றேன்.

"ஒரு உள்சட்டை மேற்சட்டை கூடக் கிடையாதா"? என்றான்.

"எல்லாம் ஊரில் கச்சேரியில் என் மேசைப் பெட்டியில் பத்திரமாய் வைத்திருக்கிறேன்" என்றேன்.

"ஏன் இங்கு கொண்டுவரவில்லை?"

"அனாவசியமாய் இங்கு கொண்டுவந்தால் அடிக்கடி அழுக்காய்ப் போய்விடும் நான் அதை வண்ணானுக்குப் போடுகிற வழக்கமில்லை யாதலால் நானே துவைக்கவேண்டும். மேலும் இரண்டாவது சட்டையும் நான் வைத்துக்கொள்ள வில்லை" என்றேன்.

"நீங்கள் தாலூகா குமாஸ்தாவென்று நான் நம்பும்படி இவ்வூரில் ஒரு சாக்ஷி கொடுக்க முடியுமா?"

"அப்படியே ஆகட்டும்" என்று நான்பார்க்கவந்த சிநேகிதரிடத்தில் அச்சேவகனைக் கூட்டிக்கொண்டு போனேன். அவர் ஒரு கலெக்டர் ஆபீஸ் குமாஸ்தா. பிறகு அச்சேவகன் திருப்தியடைந்து திரும்பிப் போகையில் 'தாங்கள் என்பேரில் கோபிக்கக் கூடாது. தாங்கள் இனி வெளியே போகும்போதெல்லாம் ஒரு சட்டையாவதில்லாமல் போவது அழகல்ல. அதனால்தான் நான் உங்களைப்பார்த்து ஏமாந்துவிட்டேன்." என்று கும்பிட்டுச் சென்றான்.

"நான் உன்னை இவ்வளவுதூரம் பயனின்றி வேலையை விட்டிழுத்து வந்ததற்காக நீதான் என்னை மன்னிக்கவேண்டும்" என்று நான் புன்சிரிப்புடனே சொன்னேன்.

எந்த அற்பக் காரியத்தையும் இடறி விழாமல் ஒழுங்காய் எனக்குச் செய்யத் தெரியாது. எனக்கு மேற்பட்ட உத்தியோகஸ்தர் யாராவது தூரத்தில் எதிர்ப்பட்டால் அவருக்கு வந்தனமளிக்க எண்ணிக்கொண்டேயிருப்பேன். அவர் சமீபத்தில் வந்ததும் மறந்துவிடுவேன்; அல்லது அவர் கிறிஸ்தவரா யிருந்தால் நமஸ்காரம்என்பேன்; பிராமணராயிருந்தால் "சலாம்" என்று இடதுகையைத் தூக்குவேன்.

ஒருதரம் தாசில்தார் ஒரு பெரிய அர்ஜி ஒன்றை என்னிடம் கொடுத்து "இதைப்பார்த்து ஐந்து நிமிஷத்தில் சுத்தநகல் ஒன்று தயார் செய் கலெக்டர் துரைக் கனுப்பவேண்டு" மென்றார் வேகமாய் எழுதினால் அதைப் பத்து நிமிஷத்தில் முடிக்கலாம். சற்று எழுத்து நன்றா யிருக்கவேண்டுமானால் பதினைந்து நிமிஷம் பிடிக்கும். நான் அதை வெகுவேக

மாய் எழுதி ஆறுவது நிமிஷத்தில் முடித்துக் கடைசிக் காகிதத்தில் மையொற்றும் பொருட்டுச் சருமணற் பெட்டியைக் * கவிழ்ப்பதற்குப் பதிலாகக் கை தவறி மைக்கூட்டைக் கவிழ்த்து விட்டேன் - அது முதல் அந்தத் தாசீல்தார் என்னிடம் அவசரமான வேலை யொன்றையும் கொடுக்கிறதில்லை.

ஒருதரம் நான் ரயில் பிரயாணம் செய்யும்பொழுது ஒரு கிச்சிலிப்பழம் வாங்கினேன். ஒரு கையில் பழத்தைப் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் அதன் தோலை உரித்தேன். ஓடும் ரயில்வண்டியிலிருந்து ஏதாவது ஒரு கனப்பொருளை வெளியே எறிந்தால் அப்பொருள் எறிந்தவனது வண்டிக்குப் பின் தங்கி நிற்காமல் அது கீழே விழுமளவும் அவனுக்கு நேராகவே ஓடிவரும். ஏனெனில் ரயிலின் வேகம் அப்பொருளிலும் ஐக்கிய பாவத்தினால் அத்தியாரோபமாகியிருப்பதால், அப்பொருள் எறிபட்ட வேகத்தினால் வெளியே போவதோடுகூட ரயிலினிடமிருந்து கிரஹிக்கப்பட்ட வேகத்தினால் ரயில் செல்லும் திசையிலேயே அதற்கு சரியாய் அதன் பக்கத்திலும் ஓடிவரும் என்று என் உபாத்தியாயர் சொல்வதுண்டு. அது எனக்கு அக்காலத்தில் நன்கு விளங்கவில்லை. அதை பரிசோதிப்பதற்காகக் கிச்சிலிப் பழத்தின் தோலை எறிய உத்தேசித்துக் கையிலிருக்கும் பழத்தை எறிந்து விட்டு அது பறக்கும் திசையையும் வேகத்தையும் ரயில்போகும் திசையையும் வேகத்தையும் இரண்டுக்குமுள்ள சம்பந்தத்தையும் ஆலோசித்துக் கணக்குப் போட்டுக் கொண்டே தோலைப் பழமென்று தின்றேன். கொஞ்சம் தொண்டையில் காரல் கண்டபிறகுதான் கையிலிருப்பது தோல் என்று அறிந்தேன்.

இன்னொருதடவை நான் வயல் வெளியில் ஒற்றையடிப் பாதை வழியாய்ப் போய்க்கொண்டிருக்கையில் ஒரு சிறு கன்னிகை எதிரேவந்தாள். நான் அவளுக்கு வழிவிட எண்ணி வலதுபுறம் ஒதுங்கினேன் அவள் எனக்கு வழிவிட எண்ணி அதே சமயத்தில் அதே பக்கத்தில் ஒதுங்கினாள். நான் அதைக்கண்டு பழைய பாதைக்குத் திரும்புகையிலேயே அவளும் அப்புறமே திரும்பினாள். பிறகு அவள் வேறுபக்கம் போகட்டும் என்று நான் சற்றுக் காத்திருந்தும் அவள் பிரமித்து நின்றமையால், நான் இடதுபுறம் ஒதுங்கினேன். அவளும் அதே சமயத்தில் வெகு பரபரப்பாய் அப்புறமே ஒதுங்கினாள். பிறகு நான் எங்கும் திரும்பாமல் அங்கேயே ஸ்தம்பமாய் நிற்க அவள் வயலுக்குக் குறுக்கே ஓடி வரப்பைத்தாண்டி அடுத்த வயலுக்குப்போய் சிரித்துக்கொண்டே வீடுபோய்ச் சேர்ந்தாள். நான் வெட்கித் தலைகுனிந்து சென்றேன்.

(இன்னும்வரும்)

தாலூக்காதுமாஸ்தா.

* மையொற்றுங் காகிதம் அக்காலத்தில் தாசீல்தார்களுக்கு மட்டும் சர்க்காரில் மாதமொன்று கொடுப்பார்கள். குமாஸ்தாக்களுக்குக் கிடையாது.

---

உ

ஓம் ஸ்ரீ சாவித்திரியை நமஃ

# விவேகசிந்தாமணி

## உபநிஷதர்த்த தீபிகை.

[விவேகசிந்தாமணிக்கென்று பிரத்தியேகமாக எழுதப்பட்டது].

## 11. பாவனோபநிஷத் பிரயோகவிதி.

(இரண்டாம் பாகம்.)

-:-(o)-:-

(84-வது பக்கத்தொடர்ச்சி.)

இந்த்யா பாவனையை எல்லாவற்றிற்கும் கடைசியிலும் செய்யலாம்.

முதலாவரணமாகிய சதுரசிரம்.

(a) முதல் ரேகை.

"சதுரசிரத்தின் முதல் ரேகைக்கு நமஸ்காரம்" என்று பின் சொல்லப்போகும் ஸ்தானங்களில் வியாபக நியாஸம் செய்யவும்.

(1) வலது தோளின் பின்பாகம்.—சாந்தரஸமாகிய அணிமாசித்தி.

(2) வலதுகையின் விரல்களின் நுனி.—அத்புதரஸமாகிய லகிமாசித்தி.

(3) வலது ஸ்பிக் பிருஷ்டபாகம்—கருணரஸமாகிய மஹிமாசித்தி.

(4) வலது காலின் விரல்களின் நுனி.—வீரரஸமாகிய ஈசித்துவ சித்தி.

(5) இடது காலின் விரல்களின் நுனி.—ஹாஸ்ய ரஸமாகிய வசித்துவசித்தி.

(6) இடது ஸ்பிக்.—பீபத்ஸ ரஸமாகிய பிராகாம்ய சித்தி.

(7) இடது கைவிரல்களின் நுனி.—ரௌத்திர ரஸமாகிய புத்திசித்தி.

(8) இடது தோளின் பின்பாகம்.—பயானக ரஸமாகிய இச்சாசித்தி.

(9) சூளியின் (மயிரின்) மூலம்.—சிருங்கார ரஸமாகிய பிராப்திசித்தி.

(10) சூளியின் பின்பாகம்.—நியதியாகிய சர்வ காமசித்தி.

(b) இரண்டாம் ரேகை.

"சதுரசிரத்தின் மத்திய ரேகைக்கு நமஸ்காரம்" என்று விபாயாக நியாஸம் செய்யவும்.

(1) இரு பாதங்களின் இருபெருவிரல்கள்.—காமமாகிய பிராஹ்மீ சக்தி.

(2) (தேகத்தின்) வலதுபக்கம்.—குரோதமாகிய மாஹேசுவரீ.

(3) மூர்த்தா (சிரசு).—லோபமாகிய கௌமாரீ.

(4) இடது பார்சுவம்(பக்கம்).–மோஹமாகிய வைஷ்ணவீ.

(5) இடது ஜானு (முழங்கால், முட்டு)—மதமாகிய வாராஹீ.

(6) வலது ஜானு.—மாத்ஸர்யமாகிய மாஹேந்திரீ.

(7) வலது தோளின் வெளிப்புறம்.—புண்யமாகிய சாமுண்டீ.

(8) இடது தோளின் வெளிப்புறம்.—பாபமாகிய மஹாலக்ஷ்மீ.

(c) மூன்றுவது ரேகை.

"சதுரசிரத்தின் கடைசீ ரேகைக்கு நமஸ்காரம்" என வியாபக நியாஸம் செய்யவும்.

(1) இரண்டு கால்களின் இரண்டு பெருவிரல்கள்.—அதோ சஹஸ்ரகமலமாகிய ஸர்வஸம்க்ஷோபினீ முத்திரை.

(2) வலது பார்சுவம் (பக்கம்).—மூலாதாரமாகிய சர்வ வித்ராவிணீ முத்திரை.

(3) மூர்த்தா (சிரசு).—சுவாதிஷ்டானமாகிய சர்வாகர்ஷிணீ முத்திரை.

(4) இடது பார்சுவம்.—மணிபூரகமாகிய சர்வவசங்கரீ முத்திரை.

(5) இடது ஜானு (முழங்கால்).—அனாஹதமாகிய சர்வோந்மாதினீ முத்திரை.

(6) வலது முழங்கால்.—விசுத்தியாகிய சர்வ மஹாங்குச முத்திரை.

(7) ஹிருதயத்தின் வலதுபாகம்.—இந்திர யோனி(லம்பிகாக்ரம்)ஆகிய சர்வகேசரீ முத்திரை.

(8) ஹிருதயத்தின் இடதுபாகம்.—ஆஞ்ஞையாகிய சர்வபீஜ முத்திரை.

(9) துவாதசாந்தம்.—ஊர்த்துவ சஹஸ்ர கமலமாகிய சர்வயோனி முத்திரை.

(10) பாதாங்குஷ்டம்.— நவாதாரமாகிய (ஒன்பது ஆதாரமாகிய) சர்வத்ரிகண்ட முத்திரை.

ஹிருதய ரூபமான த்ரைலோக்ய மோஹன சக்ரேசுவரீயான திரிபுரைக்கு நமஸ்காரம்.

பிரகடயோகினீ ரூபமான ஸ்வாத்ம ஸ்வரூபமாகிய அணிமாசித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்ன ரூபமான ஸ்வாத்ம ஸ்வரூபமாகிய சர்வசம்க்ஷோபிணீ முத்திரைக்கு நமஸ்காரம்.

இரண்டாமாவரணமாகிய ஷோடசதள பத்மம்.

ஷோடசதள கமலத்திற்கு நமஸ்காரம் என வியாபக நியாஸம்.

(1) வலது காதின் பின்புறம்.—பிருதிவியாகிய காமாகர்ஷணீ நித்தியாகலா.

(2) வலது தோள்.—அப்புவாகிய புத்தியா கர்ஷிணீ நித்தியாகளை.

(3) வலது கூர்பரம் (முழங்கை).—தேஜஸாகிய அஹங்காராகர்ஷிணீ நித்தியாகளை.

(4) வலதுகையின் பின்பாகம்.—வாயுவாகிய சப்தாகர்ஷிணீ நித்தியாகளை.

(5) வலது துடை.—ஆகாசமாகிய ஸ்பர்சாகர்ஷிணீ நித்தியாகளை.

(6) வலது முழங்கால்.—சுரோத்தரமாகிய ரூபாகர்ஷிணீ நித்தியாகளை.

(7) வலது குல்பம் (கணைக்கால்).—துவக்காகிய ரஸாகர்ஷிணீ நித்தியாகளை.

(8) வலது காலின் தலம் (உள்ளங்கால்).—சக்ஷுஸ்ஸாகிய கந்தாகர்ஷிணீ நித்தியாகளை.

(9) இடது காலின் தலம்.—ஜிஹ்வையாகிய சித்தாகர்ஷிணீ நித்தியாகளை.

(10) இடது குல்பம் (கணைக்கால்).—கிராணமாகிய தைர்யாகர்ஷிணீ நித்தியாகளை.

(11) இடது முழங்கால்.—வாக்காகிய ஸ்மிருத்தியாகர்ஷிணீ நித்தியாகளை.

(12) இடது துடை.—பாணீ (கை) யாகிய நாமாகர்ஷிணீ நித்தியாகளை.

(13) இடது கையின் பின்பாகம்.—பாதமாகிய பீஜாகர்ஷிணீ நித்தியாகளை.

(14) இடது கூர்பரம் (முழங்கை).—பாயுவாகிய ஆத்மாகர்ஷிணீ நித்தியாகளை.

(15) இடது தோள்.—உபஸ்தமாகிய அம்ருதாகர்ஷிணீ நித்தியாகளை.

(16) இடது காதின் பின்பாகம்.—விகாரத்தையடைந்த மனமாகிய சரீராகர்ஷிணீ நித்தியாகளை.

ஹிருதய ரூபமான சர்வாசாபரிபூரகசக்ரேசுவரீயாகிய த்ரிபுரேசிக்கு நமஸ்காரம்.

குப்ததர யோகினீ ரூபமான ஸ்வாத்மஸ்வரூபமான லகிமாசித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்ன ரூபமான ஸ்வாத்மஸ்வரூபமான வித்ராவிணீ முத்திரைக்கு நமஸ்காரம்.

மூன்றும் ஆவரணமாகிய
அஷ்டதள பத்மம்.

"அஷ்டதள பத்மத்திற்கு நமஸ்காரம்" என வியாபக நியாஸம்.

(1) வலது சங்கம் (நெற்றியின் எலும்பு).—வசனமாகிய அனங்க குசுமை.

(2) வலது ஜத்துரு (சப்பை எலும்பு).—ஆதானம் (எடுத்தல்) ஆகிய அனங்க மேகலை.

(3) வலது துடை.—கமனம் (போதல், நடத்தல்) ஆகிய அனங்க மதனை.

(4) வலது குல்பம் (கணைக்கால்).— விஸர்ஜனமாகிய அனங்க மதனாதுரா.

(5) இடதுகுல்பம்.—ஆனந்தமாகிய அனங்க ரேகா.

(6) இடது துடை.—ஹான (விடுத்தல்) புத்தியாகிய அனங்கவேகினீ.

(7) இடது ஜத்ரு (சப்பை எலும்பு).—உபாதன (ஏற்றுக்கொள்ளுதல்) புத்தியாகிய அனங்காங்குசா.

(8) இடதுசங்கம் (நெற்றி எலும்பு).—உபேக்ஷாபுத்தியாகிய அனங்கமாலினீ.

ஹிருதய ரூபமான சர்வசங்க்ஷோபனசக்ரேசுவரீயாகிய திரிபுரசுந்தரிக்கு நமஸ்காரம்.

குப்ததர யோகினீ ரூபமான ஸ்வாத்மஸ்வரூபமான மஹிமா சித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்னரூப ஸ்வாத்ம ஸ்வரூபமான ஸர்வாகர்ஷணீ முத்திரைக்கு நமஸ்காரம்.

நான்காமாவரணமாகிய சதுர்தசார சக்கிரம்.

"சதுர் தசாரசக்ரத்திற்கு நமஸ்காரம்" என வியாபக நியாஸம்.

(1) லலாடத்தின் (நெற்றியின்) மத்திய பாகம்.—அலம்புஷாநாடியாகிய ஸர்வ ஸம்க்ஷோபிணீ சக்தி.

(2) லலாடத்தின் வலதுபாகம்.-குஹூ நாடியாகிய சர்வ வித்ராவிணீ சக்தி.

(3) வலது கன்னம்.—விசுவோதரா நாடியாகிய சர்வாகர்ஷணீ சக்தி.

(4) வலது தோள்.—வாரணு நாடியாகிய ஸர்வாஹ்லாதினீ சக்தி.

(5) வலது பார்சுவம் (பக்கம்).--ஹஸ்தி ஜிஹ்வ நாடியாகிய ஸர்வசம்மோஹினீ சக்தி.

(6) வலது துடை.--யசோவதீ நாடியாகிய ஸர்வஸ்தம்பினீ சக்தி.

(7) வலது ஜங்கா (கணைக்கால் முதல் முழந்தாள் வரை).--பயஸ்வினீ நாடியாகிய ஸர்வஜம்பினீசக்தி

(8) இடது ஜங்கா (கணைக்கால் முதல் முழந்தாள் வரை)-காந்தாரீ நாடியாகிய ஸர்வவசங்கரீ சக்தி.

(9) இடது துடை.—பூஷாநாடியாகிய ஸர்வரஞ்சனீ சக்தி.

(10) இடது பார்சுவம் (பக்கம்).—சங்கினீ நாடியாகிய ஸர்வோன்மாதினீ சக்தி.

(11) இடது தோள்.—சரஸ்வதீ நாடியாகிய ஸர்வார்த்தசாதினீ சக்தி.

(12) இடது கன்னம்.--இடாநாடியாகிய ஸர்வஸம்பத்பூரணீ சக்தி.

(13) நெற்றியின் இடதுபாகம்.-- பிங்களை நாடியாகிய் ஸர்வமந்த்ரமயீ சக்தி.

(14) நெற்றியின் பின்பாகம்.-- சுஷும்னை நாடியாகிய ஸர்வ துவந்துவக்ஷயங்கரீ சக்தி.

ஹிருதய ரூபமான ஸர்வஸௌபாக்கியதாயக சக்கரேசுவரீயாகிய திரிபுரவாஸினிக்கு நமஸ்காரம்.

சம்பிரதாயயோகினீரூப ஸ்வாத்மஸ்வரூபமான ஈசித்துவ சித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்ன ரூப ஸ்வாத்மஸ்வரூபமான சர்வவசங்கரீ முத்திரைக்கு நமஸ்காரம்.

ஐந்தாமாவரணமாகிய பஹிர்தசார சக்கரம்

"பஹிர்தசார சக்ரத்திற்கு நமஸ்காரம்" என வியாபக நியாசம் செய்யவும்.

(1) வலது கண்.--பிராணவாயுவாகிய சர்வ சித்திப்பிரதா தேவி.

(2) நாசியின் மூலம்-அபான வாயுவாகிய சர்வசம்பத் பிரதா தேவி.

(3) இடதுகண்.—வியான வாயுவாகிய சர்வ பிரியங்கரீ தேவி.

(4) குக்ஷியின் (வயிற்றின்) ஈசானியமூலை.—உதான வாயுவாகிய சர்வகாம பிரதா தேவி.

(5) வயிற்றின் வாயுமூலை.--சமான வாயுவாகிய காமப்பிரதா தேவி.

(6) இடதுஜானு (முழங்கால் முட்டு).--நாக வாயுவாகிய சர்வதுக்கவிமோசினீ தேவி.

(7) குதம் (அபானம்).—கூர்ம வாயுவாகிய சர்வமிருத்தியுப்பிரசமனீ தேவி.

(8) வலது ஜானு (முழங்கால் முட்டு).—கிருகர வாயுவாகிய சர்வவிக்னவிஞசினீ தேவி.

(9) குக்ஷியின் (வயிற்றின்) நிர்ரிதிமூலை.—தேவதத்த வாயுவாகிய சர்வாங்கசுந்தரீ தேவி.

(10) குக்ஷியின்(வயிற்றின்) அக்னிமூலை.—தனஞ்ஜய் வாயுவாகிய சர்வசௌபாக்யதாயினீ தேவி.

ஹிருதய ரூபமான சர்வார்த்தசாதகசக்ரத்திற்கு ஈசுவரீயான திரிபுராஸ்ரீக்கு நமஸ்காரம்.

குளயோகினீரூப ஸ்வாத்ம ஸ்வரூபமான வசித்துவ சித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்ன ரூப ஸ்வாத்ம ஸ்வரூபமான சர்வோன்மாதினீ முத்திரைக்கு நமஸ்காரம்.

(இன்னும்வரும்)

மு. கோ. நாராயண்ஸ்வாமி ஐயர்.

ஆர். விசுவேசுவர சாஸ்திரி மஹோபத்யாயர்.

———:-:———

## The Great Mystery of Guru Poojah.

**The Mystic sermon of two tiny weeds.** †

Heard in the Mystic Cave at Kodampakkam.

*On Monday Evening, 28th August 1911.*

### குருபூஜை மஹத்துவம்.

கோடம்பாக்கம் குரு ஸமாதிக் குகையில்
இச்சிறு மூலிகைகள் செய்த மவுனப் பிரஸங்கம்.

————(:-*-:)————

குருஸ்துதி.

அறிவினுக் கறிவாந் தன்மை
யருளினு லளித்தாய் போற்றி!
சிறியனேன் சிறுமை தீர்த்துச்
செம்பதமருள்வாய்போற்றி!
பிறிதறும் பொருளா யெங்கும்
பேதமற்றிருந்தாய் போற்றி!
யறிவறும் அறிவானந்த
அருட்டிருப் பாதம் போற்றி!

குருசோல்.

"அது நீ யானுய்! அதி நிஜம்!"

"அது என்ருல் எது?"

வேதாகமங்களிற் சொல்லிய வெல்லாம் "இது". இவையொன்று மல்லாதது "அது". அப்படிச் சொல்வது அவாந்தர வாக்கியம். வாச்சியாதீதமான வாக்கியம். தத்பத லக்ஷியமான பிரணவமுக்தி ஸ்வரூபமாம் அறிவு 'அது'. யதார்த்த ஸ்வரூபமும், ரகஸ்ய சூக்ஷமமும், அறுதியாங் காரணமும், அபிமான ஒடுக்கமும், சாக்ஷியாம் மோனமும் பஞ்சபூதமாக வுடையது எதுவோ அந்த மோனகுருநாதருக்கும் அப்பாலாயுள்ளது "அது". அந்த "அறிவறும் அறிவானந்தம்" நீ யானுய்!

"நீ"—என்ருல் யார்?

வேதாகமங்கள் கோஷித்துக் கூறி யொடுங்கும் வேதாந்த மோனமாய், நாதாந்த ரூபமாய், 'அவதூதாத்மனுய்' மஹாவாக்கியங்களுக் கிருப்பிடமாய், துவம்பத லக்ஷியமாய், சாக்ஷி விருத்தி யன்றி வேறலவாய், நிவிர்த்தியின் முடிவாய், மோனமே முத்தரையாயுள்ள "பஞ்ச சாக்ஷி" "நீ". இது மஹாவாக்கியம் என்று சொல்லப்படும். 'ஆனுய்' என்பது சந்தேக மறச் சொன்ன நிவிர்த்தி வாக்கியம்.

பஞ்சசாக்ஷி யாவது யாது.

(1) வியஷ்டியில் ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களுக் கபிமானியான ஜீவசாக்ஷியாம் கூடஸ்தர்— 1.

(2) சமஷ்டியில் விராட்டு, இரண்யகர்ப்பன், மாயையென்கிற சரீரத்திரயங்களுக்கு அபிமானியான ரசுவர சாக்ஷியாம் பிரஹ்மம்— 2.

(3) வியஷ்டி, சமஷ்டி யிரண்டிற்கும் பொதுவான காரணமா யிருக்கும், சத்து, சித்து, ஆனந்தம் என்கிற காரண சரீரங்கள் மூன்றுக்கும் அபிமான தேவதையான பரப்ரஹ்ம சாக்ஷியாம் ஸர்வசாக்ஷி— 3.

(4) மேற்சொன்ன சரீரத் திரயங்களும் விட்ட விடத்தும் வாஸனு பலத்தால் சுத்தம், சூந்யம், சுபாவம் என்கிற மூன்றையும் சரீரமாக அபிமானித்து 'உபாதி யொழிவு' தானுகி சுத்தசூந்ய சுபாவங்களை யபிமானித்து நிற்கும் "ஒழிவு" நிலைக்குச் சாக்ஷியாம் அதீதசாக்ஷி—4.

(5) அதீத சாக்ஷியிலும் அபிமானத்துவம் நீங்காதது கண்டு அதையுங் கடந்து போய், யதார்த்தம், இரகஸ்யம், அறுதி யெனு மிவற்றையே நித்தமுத்த சரீரமாக (உபாதியாக) க்கொண்டு அபிமான மொடுங்கப்பெற்ற ஒடுக்கமே தானுகி நிற்க, அந்த ஒடுக்க நிலைக்குச் சாக்ஷியாய் நிற்கும் மோன சாக்ஷி— 5.

இப்படியாகவுள்ள பஞ்சசாக்ஷிகளில் (1) கூடஸ்தர், (2) பிரஹ்மம், (3) ஸர்வசாக்ஷி, (4) அதீதசாக்ஷி யென்கிற நால்வரும் நாலுபக்கத்திலிருந்து செத்த பிணமாம் (ஸ்தூல, சூக்ஷ்ம, க்காரண-அபிமானம் என்றுள்ள) சதுர்வித சரீ

† Natural order: *Amaranthaceæ* Sans: *Thanduliya.*

ரத் திரியங்களைத் தூக்கிக்கொண்டு போக, ஐந்தாம் சாக்ஷியாகிய "மோனம்" சிதக்னிகுண்டம் என்கிற நெருப்புச்சட்டி தூக்கிக்கொண்டு போகிறது. சரீரத் திரியங்களுக்கும் ஜநந தசையில் அபிமான தேவதையாயிருந்த ஜீவேசுவர பரப்ரஹ்ம (அபிப்ான)ஒழிவு என்னும் அபிமான தேவதைகள் அதீத சாக்ஷியுங்கடந்த அபிமான ஒடுக்கத்தின் ஐக்கிய பத்தியத்தினல் பிணத்துக்கு ஆதாரமான பாடையாக உதவ, (அபிமான) ஒடுக்கம் தலையணையாக உதவுகிறது இப்படியாகச் செத்தபிணம் நித்தம் சுடுகாடு போகிற (சுஷும்னை யேறுகிற) காக்ஷியை— "அறிவு அறும் அறிவானந்த அருட்திருப் பாதம் போற்றி" யிருளோடு மருளும் போக்கி இரவிமதி யொத்திலங்கும் குருபரன் ஆணையாலே குருமொழி கடவாச் செல்வர், மறுமொழி கூறலாற்றார், மாறுசொல்பேசாமௌனத் திருந்திருந்தேகமாகி, ஏகமும் அத்வைதமான அன்பினில் கண்டுகண்டு அஹப்புறம் ஒத்துவாழ இருவினைத் துவந்துவம் தானும் எதிலா மொழியாப் போமே!

இதுதான் "அதி நிஜம்"—அதாவது சந்தேக விபரீதமற்ற உண்மை. அதியதத்தால் சந்தேக சுபாவநீக்கமும், நிஜபதத்தால் விபரீத வேற்றுமை நாசமும் வித்திக்கச் செய்த படி யென்றுணர்க. இப்படிப்பட்ட 'குருபூஜை' செய்ய இந்த ஆகஸ்டுமீ 28-உ சுக்லபஞ்சமி யோடு சுவாதி நக்ஷத்திரங்கூடிய சோமவாரத்தன்று கோடம்பாக்கம் சென்று குருமடதரிசனம் செய்து பின் திரும்பினேம். திரும்பி வரவும் ஸ்ரீ மாணிக்க சித்தர் திருவருளைச் சிந்தித்திருக்க, அவர் சிஷ்யரைக்கேட்ட கேள்விக்கு அவர் மறுமொழி சொல்லாவிடினும் அதற்கு உத்தரம் ஆகாசவாக்காகத் தானே பிறந்தது. பிறந்ததோர் பரைவாக்கைப் பச்யந்தி தன்னிலேற்ற, பச்யந்திதானுமந்த மத்யமை வாக்குத்தானுய் மனத்தினிலிருந்திலங்க, வைகரி வாக்கிலஃதை வரைந்திடக் குறிபார்த்திட்டேன். பார்த்திட்ட குறியதனுல் இருதயத்தில் சோதிகாண, இன்பரஸ மதிலிருந்து தானேயூற, அதையறிந்து அமிர்த மென்றன்போடுண்டு, அசையாமல் மனம் நிறுத்தி மௌனம் பூண்டேன்!—'பரம கைலாச'மென்ற வெளியுங்கண்டேன். கண்டதோர் வெளியில் உண்டதோர் உண்மையை "விண்டவர் கண்டிலர் கண்டவர் விண்டிலர்" என்றவர் திருமுறைப் படியேயானும் ஊமையர் வார்த்தையால் உரைத்திடக்கேண் மினே! "கேட்டவர்க்கழிவில்லை, கேளார்க்குச் செவியில்லை: கேட்டுங்கேளாத நிர்மூடர்க் கறமில்லை, பொருளில்லை, இன்பமொடு வீடில்லை, காடில்லை நாடில்லை, கர்மியவன் தர்மியா கான்" என்றுரை செய்தனன் என்னுருவழித் துப் பொன்னுருத்தந்த புநிதனும் மாணிக்க வித்தன் தானே.

"ஆமப்பா தேகமென்ற பஞ்சபூதம்
அடங்கியொன்ருய் நின்றவிடம் ஆர்தான்காண்
நாமப்பா சொல்லுகிறோம் மைந்தாகேளு! [பார்!
நாட்டமென்ற பூதமைந்தும் நாவென்றெண்ணி
தாமப்பா தன்னிலேயாம் தமருக்குள்ளே
தன்னறிவே பூரணமாய்த் தானேசென்று
ஓமப்பா வென்றுமன துன்னியாட
ஊடுருவிப் பாய்ந்துமன மொடுங்குங்காணே!"

மனமொடுங்கப்பெற்ற சற்சிஷனும் மைந்தனுக்கு பரமகுரு தரிசனங்காணக் கிடைத்தற் பொருட்டு ஸர்வகாரண பூதாசக்தியான ஸ்ரீகுரு தானும் 'தண்டுலீ' என்கிற மூலிகையைக் காட்டி, ஸ்வர்ணகாரமான பைம்பொன் செம்பொன் நிறம் விளங்கப் பாலொழுகும் அப்பச்சிலைத்தண்டை அம்மான்பச்சையாய்ப் புசிக்கச்செய்து "கோனை(இறைவனை) குருபீட மானவீட்டைக் குறிப்பறிந்து வணங்குதற்கு" வழிசென்னுரே!

'காணுதஅந்தரங்க சுஷும்னைவீடு!
கண்ணுன மணிவீடு கமலவீடு!
தோணுது தோன்றுகிற ஜோதிவீடு!
ஜோதிர்மய மானசிவ கயிலைவீடு!
வானுன தேவர்களும் ரிஷிகள்சித்தர்
வரிசையுடன் தான்வணங்கி மகிழ்ந்தவீடு!
கோனன குருபீட மானவீட்டைக் [பாரே!"
குறிப்பறிந்து வணங்குதற்குச் சொன்னேன்

"பாரப்பா மனமேது தியானமேது!
பதிவான சரியையொடு ஞானமேது!
நேரப்பா விழிமடவார் மயக்கமேது!
நிஜமான மக்களொடு சுற்றமேது!
காரப்பா உபதேச குருத்தானேது!
கருவேது கைபாக முறைதானேது!
சாரப்பா உடலேது உயிர்தானேது!
தகமையில்லாப் பெருவெளியில் சாருந்தானே!"

"தானென்ற ஓங்காரக் கம்பமாச்சு!
ச ்கையுடன் அகாரமங்கே பிறந்ததாச்சு!
வானென்ற வழியறியார்க் கொன்றுமில்லை!
மகத்தான பூரணத்தை மகிழ்ந்துகொள்ளு!
ஊனென்ற உடலுயிரும் நாதவிந்து!
ஒடுங்கிநின்ற சுழினையடா அண்டமேரு!
கோனென்ற குருபீட மானமேருள்
குறியறிந்து நெறிதமர்க்குள் குணமாய்நில்லே!"

"குணமான மந்திரத்தைச் சொல்லக்கேளு!
குருவான அகாரமொடு உகாரத்தோடு
இனமான மகாரமொடு மூன்றுஞ்சேர்ந்தால்
இருத்துமடா சிவயோகத் தின்பமாக!
கனமான உச்சிவெளி சுழினைமூலம்
கண்ணறிந்து விண்ணதனைக் கருவாய்ப்பாரு!
மனமான பஞ்சஅறை † வாசல்காண
மவுனமுடன் ஓம்சிவயவசி யென்றூனே *!"

* "ஊணுவது சுழிமுனையில் 'வங்' 'சிங்'என்று
உண்மையுடன் அண்டவெளிக் குள்ளேசென்று
காணுவது ரேசகபூரகமாய் நின்று
கலையறிந்து கும்பகத்திற் கனிந்துகொண்டால்
தோணுவது என்னென்று சொல்வேனப்பா!
தூண்டாத மணிவிளக்கின் சோதிதன்னைப்
பேணுவதாற் கயிலாஸ தேகமாச்சு
பேரண்டத் துச்சிவெளி மகாரமாச்சே!"

இப்படி ஸ்தூல சூக்ஷ்ம காரணமாகிய தேகத்திரியங்களும் பழுத்து விழுந்துபோக, அவைகளை யபிமானித்திருந்த பெத்தனும் ஜீவன்தான் முக்தனுகத் "தூண்டாத மணிவிளக்கின் சோதி தன்னைப்பேணி" "கயிலாசதேகம்" என்னும் ஜோதிர்மயமான அழியாத தேவதாரூபம் பெற்று, சாலோக, சாமீப்ய, சாரூப், சாயுஜ்ய பதமுத்தி ஸித்தியினல், "பேரண்டத்துச்சிவெளி" கண்டு காரண பஞ்சாக்ஷரத்தால் அதையுங் கடந்து துரிய வடிவினனுய்த் துரிய பஞ்சாக்ஷரமாம் "சிவயவசி" தரிசனஞ் செய்துகொண்டு, அங்கிருந்து ஓங்காரக் கம்பத்தின் உச்சியேறி உடலுயி ரொன்ரு முண்மையறிந்து "ஊனுடம்பாலயமா" யமர்ந்திருத்தலே நிஜமான சமாதி தரிசனமாம். இந்த சமாதி தரிசனம் காணவே, ஆகஸ்டுமாசம் 28வ சுக்ல பஞ்சமியோடு சுவாதி நக்ஷத்திரங் கூடிய சோமவாரத்தன்று "கோடம்பாக்கம்' சென்று குதூஹலம் நிறைபக் "குருபூஜை" செய்து வந்தோம். அப்பூஜை மஹத்துவத்தை உள்ளத் துணர்ந்த துணர்ந்தபடி சொன்னேன். பஹிர்முகத்தி லெல்லாம் பயித்தியக் காரத்தனமே! கு-ரு, அதாவது, இருளைப் போக்குகிறவர் குரு. "குருபூஜை", செய்வதாவது "தூண்டாத மணிவிளக்கின் சோதிதன்னைப் பேணுவதாம்." இந்தக் குருபூஜை செய்தால் "கயிலாசதேகம்" எனும் தேவதாஸ்வரூபம் சித்திக்கும். அப்பொழுது மந்திர யந்திர தந்திரங்க ளெல்லாம் சொன்னபடி கேட்கும். ஒரு சிறு பச்சிலையுங்கூட சின்மயானந்தமாய் விளங்கி நாதப்பாலொழுக மவுனப்பிரசங்கம் செய்யும். ஸ்ரீமாணிக்கஸ்வாமிகள் மவுனப் பிரஸங்கம் கேட்கப்பெறும் பேறுபெற்ற விசேஷத்தால் தண்டுலம் (அரிசி) போல் வித்தையுடைத்தா யிருப்பதால் "தண்டுலீ" ‡ என்னும் பெயர்பெற்றுப் பைம்பொன், செம்பொன், நிறம் போதிந்து பூத்துப் பூரித்துப் பாலொழுக விளங்கிய சித்தர்மூலிகையாம் திருமூலப் பச்சிலைக ளிரண்டு செய்ததோர் திவ்யப் பிரசங்கத்தைக் கேட்டு "சகமார்க்கம் புலனொடுக்கித்,

† 'அஞ்சுசபை' என்றும்பாடம்.
* 'ஊன்று' என்பதன் திரிபு.

‡ "தண்டுலம் இவ் பீஜாநி அஸ்மிந் ஸந்தி இதி தண்டுலீ".

அதாவது "தண்டுலம் (அரிசி) போல விதைகள் இதில் இருக்கிறபடியால் தண்டுலீ யென்று பெயர்."

தடுத்துவளியிரண்டுஞ் சலிப்பற்று, முச்சதுர முதலாதாரங்கள் அகமார்க்கமறிந்து, அவற்றி னரும்பொருள்க ளுணர்ந் தங்கணேந்துபோய் மேலேறி, அலர்மதி மண்டலத்தின் முகமார்க் கவமுது[ண்டு]டல, முட்டத்தேக்கி, முழுச் சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகளுக அஷ்டாங்க யோகமார்க்க முற்றும், உழத்த ழுழந்து, சிவன் தனுருவத்தைப்பெற்று" அம் மூலிகைகள் செய்த அவாந்தரமான மௌனப் பிரசங்கத்தின் கருத்தைக் 'கருத்தரிக்க' வெடுத் துரைத்தேன் ஸ்ரீ மாணிக்க சித்தர் தம் மௌ னப் பிரஸங்க மகிமையினால்.

"அறிவினலையைந்தாக அறிவித்தவரசே போற்றி!
அறிவினலொன்று முன்னுதிருந்திடவமைத்தாய் போற்றி!
அறிவுபேரின்பமாகவளித்திடுமத்தாபோற்றி
அறிவறுமறிவானந்த அருட்திருப்பாதம்போற்றி!"

ஓம்தத்ஸத்.

———:(ο):———

# EXTRACT.

# COCOANUT PLANTING.

## தென்னந்தோப்பு வைத்தல்.

சில வருஷங்களுக்கு முன்னால் தேங்காய் ஒன்று 4-பை முதல் 6-பை வரையில் தேங்காயின் பருமனுக்குத் தக்கபடி விற்றுக்கொண்டிருந்தது. இப் பொழுதோ சென்னையில் தேங்காய் ஒன்று ஒரு அணு முதல் ஒன்றரை அணு வரையில் விற்று வருகிறது. அதாவது ஏறக்குறைய மூன்றுபங்கு விலையாகியிருக் கிறது. சரியானபடி மழைகள் பெய்யாததால் உண வுப் பொருட்களுக்கெல்லாம் விலையேறி யிருப்பதைப் போல் தேங்காய்க்கும் விலை யதிகரித்திருக்கிறதென் பது பொதுஜன அபிப்பிராயம். இப்படி அபிப் பிராயப்படுவது சரியன்று. ஏனென்றால் விசேஷ மாய் தென்னந்தோப்புகள் வைத்திருப்பது நீர்வளம் நிலவளம் நிறைந்த இடங்களிலானதாலும், மழையின் உதவியை எதிர்பாராமல் எப்போதும் தண்ணீர் பாய்ச்சக்கூடிய இடங்களிலானதாலும், மானுவாரியை நம்பி ஒருவரும் தென்னந்தோப்பு வைக்கமாட்டார் கள். எவ்வளவு தண்ணீர் பாய்ச்சினாலும் மழைக்குச் சமானமாகுமென்று நாம் சொல்லவில்லை. என்று லும் தென்னம்பிள்ளைகளுக்குப் போதுமானபடி தண்ணீர் இறைத்து வந்தால் மழையில்லாமற் போன போதிலும் அதன் மகசூலில் விசேஷமாய் வித்யாசப் படாது. முன் விளைவடைந்ததைப்போல் இப்போ தும் விளைந்து வந்தால் விலை யதிகப்படவேண்டிய காரணமென்ன வென்னும் கேள்வி பிறக்கலாம். பொதுவாக இதற்குப் பல காரணங்கள் கூறுகிறார் கள். அதாவது முன்னுவிருந்த கூலியைவிட இப் போது அதிகக்கூலி கொடுக்கவேண்டியிருக்கிறதென் றும், எருவின் கிரயம் அதிகரித்திருக்கிறதென்றும், ஆர்பத்நட் கம்பெனி அழிந்தபோன பிற்பாடு நிலக் கிரயம் அதிகரித்திருக்கிறதென்றும், நாகரீகம் அதி கமாக அதிமாகக் காலையில் ஜனங்கள் பழையசாதம் சாப்பிடுவதை விட்டு இடியாப்பம், ஆப்பம், பிட்டு முத லிய தேங்காய் சேரும் பலகாரங்களைச் சாப்பிடுவதால் தேங்காய்கள் அதிகமாய்ச் செலவாகிற தென்றும் அதனால் விலை அதிகரித்திருக்கிறதென்றும் நினைக் கிறார்கள்.

விலை அதிகமானதற்கு இவைகள் மட்டும் முக்கிய மான காரணங்களல்ல. பின் என்னதான் முக்கிய காரணங்களென்றால் ஐரோப்பியர்கள் கொப்பரைத் தேங்காயிலிருந்தும், தேங்கா யெண்ணெயிலிருந்தும் அநேக உபயோகமான பதார்த்தங்கள் செய்வதற் காக இந்தியாவிலிருந்து தேங்காய்களையும் தேங்கா யெண்ணெயையும் ஏற்றுமதியாக்கிக்கொண்டு போவ துதான். இப்போது மேல் நாட்டாருக்கு எவ்வளவு எண்ணெய் வேண்டியதா யிருக்கிறதோ அவ்வளவு எண்ணெய் நமது தேசத்தில் அகப்படவில்லை. ஆகை யால் விலைகளை நாளுக்கு நாள் உயர்த்திக்கொண்டே போகிறார்கள். தேங்காய்களாய்விற்பதைவிட தேங்காய் யெண்ணெய் செய்து விற்பதில் இவர்களுக்கு அதிக லாபம் கிடைப்பதால் விசேஷமாய்த் தேங்காய்களை அனுப்புவதில்லை. நம்மிற்சிலர் தேங்காயெண்ணெயை அப்பளம் வறுப்பதற்கும, வடை முதலிய பலகாரங் கள் செய்வதற்கும், கறிகள் தாளிப்பதற்கும், மருந்து கள் செய்வதற்குமட்டும் உபயோகிக்கிறோம். ஐரோ ப்பியர்களோ தேங்கா யெண்ணெயிலிருந்து நானுவித மான சோப்புகளும், தேங்காய் சிரட்டைகளிலிருந்து விதம் விதமான பத்தான்களும் (Buttons) தேங்காய் நாரிலிருந்து புருஷ்களும் (Brush) தேங்காயிலிருந்து

நெய்யும் செய்து விசேஷ இலாபம் பெறுகிறார்கள். தேங்காயிலிருந்து செய்யப்படும் நெய்க்கும் வெண்ணெய் உருக்கி எடுத்த அப்பட்டமான நெய்க்கும் கொஞ்சமாவது வித்யாசமில்லையாம். குழந்தை முதல் நல்லநெய் சாப்பிட்டுப் பழக்கப்பட்டவர்களால் கூட தேங்காயிலிருந்து செய்யப்படும் நெய்க்கும் அப்பட்டமான நெய்க்கும் வித்யாசம் கண்டுபிடிக்க முடியாதாம். இப்போது இவ்வியாபாரம் செய்வதற்காக கொழும்பிலும் சீமையிலும் பெருத்த விடுமுதலோடு ஒரு வியாபாரஸ்தலம் ஏற்பட்டிருக்கிறது. இதில் நாளொன்றுக்குத் தற்காலம் இலட்சம் தேங்காய்கள் வாங்கிவருகிறார்கள்.

சீமையிலே தேங்காயெண்ணெய் வீசை ஒன்றுக்கு ஒருரூபாய் வரையில் கொடுத்து வாங்குகிறார்கள். இவ்வியாபாரம் சீமையோடு மட்டும் நிற்கவில்லை. இப்போது அமெரிக்கா தேசத்து வியாபாரிகளும் இதில் ஊக்கங்காட்டி வருகிறார்கள். எல்லா ஜாதியாரிலும் ஜெர்மனி தேசத்தார்தான் அதிகவியாபாரம் செய்கிறார்கள். அவர்கள் நாளொன்றுக்குப் பதினாயிரம் மணங்கு தேங்காய்நெய் செய்து விற்கிறார்கள். பிரான்ஸ் தேசத்தாரோ அதிகமாய்க் கொப்பரைத்தேங்காய் வாங்கிவருகிறார்கள். புதுச்சேரியில் தேங்காய்நெய் செய்வதற்காகச் சுற்றுப்பக்கங்களிலுள்ள தேங்காய்களெல்லாம் வாங்குவதோடு வெளியிலிருந்து தேங்காய்கள் வரவழைக்கிறார்கள். இன்னும் இருக்க இருக்கத் தேங்காய்களுக்கு கிராக்கி அதிகமாய் ஏற்பட்டு விடுமே. தவிர விலை இறங்காது. நமது விவசாயிகளோ தாங்கள்தான் அதிக புத்திசாலிகளென்றும், இப்பூலோகத்திலுள்ள மற்றவர்களெல்லாம் ஒன்றும் தெரியாத விளையாட்டுப்பிள்ளைகளென்றும், அவர்களுக்கு ஒன்றும் தெரியாதென்றும் அவர் வஹித்து வரும் பெரிய உத்தியோகங்களுக்காக அவர்கள் நேரில் சொல்லும்போது நல்லது, நல்லது என்று தலையை யசைத்துக்கொண்டிருந்துவிட்டு எழுந்து போகுமுன்னமே அதையெல்லாம் மறந்தாவது போவார்கள் அல்லது அதைக்குறித்து ஏளனமாயாவது பேசிக்கொண்டு போகிறார்கள். இப்படிச் செய்யாமல் விவசாய அனுபோகமுள்ள பத்திரிகைகளில் எழுதும் விஷயங்களையும், விவசாய டிபார்ட்மெண்டாரால் ஜனங்களின் உபகாரார்த்தமாய்ப் பிரசுரித்து இனாமாக அனுப்பும் துண்டுப் பத்திரிகைகளிலுள்ள விஷயங்களையும், விவசாயத்தில் அனுபோகமும் பாண்டித்யமுமுள்ளவர்கள் உபந்நியாசம் செய்யும் விஷயங்களையும் தங்களுக்குள்ளாக நன்றாய் ஆலோசித்துப்பார்த்துக் சரியாயிருக்குமா சரியாயிருக்காதா வென்று பார்த்தார்களானால் அவர்களுக்கே உண்மை வெளியாகும். இப்படி எப்போது நமது விவசாயிகள் செய்ய ஆரம்பிக்கிறார்களோ அப்போதுதான் நமது தேசத்து விவசாயம் முன்னுக்கு வரும். நிற்க இப்போது நாம் மேலேசொன்ன விஷயங்களால் இனி யிருக்க இருக்க தேங்காய்கள் கிராக்கியாகுமேதவிர இறங்காது: ஆகையால் ஒவ்வொரு கிருஷிகரும் தங்கள் எவ்வளவு நிலத்தில் தென்னந்தோப்புகள் வைத்து சரியாய்ப் பாதுகாத்துவர முடியுமோ அவ்வளவு செடிகள் வைத்து உண்டாக்கினால் நல்ல இலாபம் பெறுவார்கள். "கிருஷிகன்" சந்தாதாரர்களாவது இப்படிச் செய்ய பின்னடைய மாட்டார்களென்று நம்புகிறோம். தென்னை பயிர்செய்வதைக் குறித்து இனி சுருக்கமாய்ச் சொல்வோம்.

தென்னைமரமானது நீர்வளம் மிகுந்த எல்லா இடங்களிலும் பயிர் செய்யலாம். இருந்தாலும் மணற்பாங்காயுள்ள சமுத்திரக்கரை யோரங்களில்தான் இது விசேஷப் பலனைத் தருகிறது. சவுக்குமரத்தைத்தவிர விசேஷமாய் வேறு பயிர்செய்யக்கூடாத அநேகமாயிரம் ஏக்கரா மணல்பாங்கான நிலம் சமுத்திரக்கரை யோரமாய் நமது இராஜதானியிலிருக்கின்றன. அந்நிலங்கள் வெதுவாய் தரிசாய்த்தான் கிடக்கின்றன. இந்நிலங்களைத் தர்க்காஸ்து கொடுத்தாவது அல்லது சொற்பமாய் விலைகொடுத்தாகிலும் பெற்று அந்நிலங்களில் தென்னம்பிள்ளைகளைவைத்து உண்டாக்கினால் விசேஷ இலாபந்தரும். சமுத்திரக்கரையோரமா யில்லாதவர்கள் மணற்பாங்கான ஆற்றோரத்து நிலங்களிலும் வைத்து உண்டாக்கலாம். இப்படியும் செய்யச்சாத்யப்படாதவர்கள் தங்களிடமிருக்கும் மணற்பாங்கான நன்செய் அல்லது புன்செய் நிலங்களில் வைத்தும் உண்டாக்கலாம். இதற்கு முக்கியமாய் அத்யாவசியமானது என்னவென்றால் இதன் வேர்கள் சுலபமாய் பூமிக்குள் புகும்படியான மண்ணும் ஜலாதாரமுந்தான். எங்கெங்கே இவ்விரண்டும் அபரிமிதமா யிருக்கின்றனவோ அங்கெல்லாம் தென்னை பயிராகும். வெகுஆழம் வரையில் வண்டல்சேர்ந்தால் கொழுத்த மண்ணாயிருக்கும் நன்செய்களில் இது சரியாய்க்காய்ப்பதில்லை. ஏனென்றால் செடிகள் வளத்தில் கொழுத்துப் போகின்

றண. சமுத்திரக்கரையோரமா யில்லாத இடங்களில் ஒரு செடிக்கு ஒருபடி உப்பு வீதம்வைப்பது அதி சிலாக்கியமாகும். தேங்காய்களில் அநேகவிதங்கள் இருந்தபோதிலும் (1) பச்சைகாய்ச்சி, (2) கவுளிபாத்ரம், (3) நக்குவாரி, (4) செவ்விளநீர், (5) யாழ்ப்பாணம், (6) கோவா என்னும் ஜாதிகளே முக்கியம்

1. பச்சைகாய்ச்சி.—காம்பு காய்கள் முதலியன பச்சை நிறமாமிருக்கும். காய்கள் உருண்டையாயும் குலை கனத்து மிருக்கும். இந்த ஜாதி ஆறுவீது வருஷம் முதல் காய்க்கும்.

2. கவுளி பாத்ரம்.—காய்கள் மஞ்சள் நிறமாயாவது ஊதா நிறமாயாவது இருக்கும். காய்கள் அவ்வளவு பருமனு யிராமற்போனாலும் நடுத்தரமாயிருக்கும். ஆனால் கொட்டாங்கச்சியும் அதற்குள்ளிருக்கும் பருப்பும் அதிக கனமாயிருக்கும். இதுவும் ஏறக்குறைய பச்சைகாய்ச்சியைப் போலவே காய்க்கும்.

3. நக்குவாரி.—இது மூன்றுமுதல் ஐந்து வருஷத்திற்குள்ளாக காய்க்க ஆரம்பித்து விடுகிறது. ஆனால் செடி நீடித்து நிற்பதில்லை.

4. செவ்விளநீர்.—காய், பூ, காம்பு இவைகள் சிகப்பாமிருக்கும். காய் சிறியதாயும் உருண்டையாயுமிருக்கும். இதற்குள்ளிருக்கும் தண்ணீர் (இளநீர்) வைசூரிகண்டிருக்கிற காலங்களில்கூட ஔஷதமாகக் கொடுக்கலாம். இது ஏழாவது வருஷத்தில் காய்க்கிறது.

5. யாழ்ப்பாணம்.—இதுவும் பச்சைநிறம் சம்பந்தப்பட்ட காய்தான். ஆனால் இதன் காய்கள் பெரியதாயிருக்கும். உள்ளிருக்கும் பருப்பு அவ்வளவு கனமாயிருப்பதில்லை.

6. கோவா.—அலங்காரத்திற்காகவும், காக்ஷிச்சாலைகளுக்குக் கொண்டுபோகக் கூடிய அவ்வளவு பருமனும் உள்ளது. இது குலைக்கு சுமார் இரண்டு காய்களுக்கு அதிகமாய்க் காய்க்கா தாகையால் வியாபாரத்திற்கு லாயக்கில்லாதது.

வித்துதேர்ந்தெடுத்தல்.—இளமரமாயும், கிழமரமாயுமில்லாத நடுத்தரமான மரத்தில் நன்றாய் முற்றின நெற்றுக்களாய்ப்பார்த்து, காய்களை அறுத்து அங்கிருந்து கீழேபோட்டால் உடைந்து போகுமாதலால் அப்படிப் போடாமல் குலைகளைக் கயிறுகொண்டு கட்டி மெதுவாக இறக்கிக்கொண்டுவந்து வைக்க வேண்டும். காய்கள் இறக்கிய ஒரு மாதத்திற்குப் பின் நடுவது வழக்கம். மூன்று அடி ஆழத்திற்கு நன்றாய்த் தோண்டி எருக்கொட்டி காய்களைப் பூச்சி கரையான் முதலானவைகள் அரிக்காதபடி போதுமானபடி சாம்பலும் உப்பும்போட்டு ஒரு அடி தூரத்திற்கு ஒரு தேங்காய் வீதம் தேங்காய் சற்றுமேலே தெரியும்படி நடுகிறார்கள். அப்பால் அப்பாத்திகளில் ஈரம் காய்ந்து போகாத படிக்குத் தண்ணீர் பாய்ச்சி வருகிறார்கள். இப்படிச் செய்தால் சுமார் மூன்று மாதத்தில் குருத்து வரும். நெற்றுகளை நடுவதற்குமுன் ஒன்று அல்லது ஒன்றரை மாதத்திற்குத் தண்ணீரிலே போட்டு வைத்திருந்து அப்பால் நட்டால் ஒன்றரை அல்லது இரண்டு மாதத்திற்குள் குருத்து வருகிறதாம். இப்படிச் செய்வதில் தண்ணீர் இறைப்பு குறைவதுடன் ஜல்தியில் முளையுறுவதால் கரையான் முதலிய பூச்சிகளால் நஷ்டமடைவது குறையும். இம்முறை யனுசரிப்பதே நலம். நெற்று நடுவதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் நெற்றுக்குள்ளிருக்கும் இளநீர் பூராவாய்ச் சுண்டிப்போகக் கூடாதென்பதுதான். குருத்து வந்த ஆறுமாதத்தில் செடிகள் நடலாம்.

செடிகள் வைத்தல்.—தென்னம் பிள்ளைகள் வைக்க உத்தேசித்திருக்கும் நிலத்தை நன்றாய் அலர உழுது நீர் நிலவளங்களுக்குத்தக்கதாகப் பதினைந்து அடி முதல் இருபது அடி சதுரத்திற்கு ஒரு குழி வீதம் தோண்டவேண்டும். அப்படித்தோண்டும் ஒவ்வோர் குழியும் ஒவ்வொரு சதுர்கெஜத்திற்குக் குறையாமலிருக்கவேண்டும். (அதாவது மூன்றடி நீளம் மூன்றடி அகலம் மூன்றடி ஆழம்). இப்படிக் குழி தோண்டி நன்றாய்க் காயப்போட வேண்டும். குழி நன்றாய் காய்ந்தபின் சப்பாத்துக்கள்ளி அதன் வேர், வேர்ப்பக்கத்திலுள்ள மண் முதலானவை கொண்டு வந்து போடுவதுடன் கொஞ்சம் மக்கிய சாணியும் போட்டுக் குழியின் பாதிபாகத்தை நிரப்புவதுடன் ஒவ்வோர் குழிக்கும் ஒருபடி உப்புவீதம் போட வேண்டும். இப்படிப்போட்டுக் குழிகள் நன்றாய் ஆறியபின் தென்னம் பிள்ளையைக் கரையான் அரிக்காமல் இருப்பதற்காக அகப்படுமானால் போதுமானபடி மரச்சாம்பலும், இல்லாவிட்டால் சாதாரண சாம்பலாவது போட்டுத் தென்னம்பிள்ளைகளை நட்டு வெயில்படாதபடி அதற்கு மூடாப்பு போட வேண்டும். (தென்னம்பிள்ளைகளை மழைகாலத்தில் நடுவது

தான் சிலாக்கியம்). இருபது அடிக்கு ஒரு பிள்ளையாகவைப்பதுதான் சிலாக்கியம் குறைத்துவைத்தால் இடம் போதாததால் மரங்கள் கோணிக்கொண்டே போவதோடு சரியாயும் காய்க்காதென்று முன்னொரு தரம் கிருஷிகனில் தெரிவித்திருக்கிறோமல்லவா? 15-அடிக்கு ஒன்றாக நட்டால் சுமார் 210 பிள்ளைகளும் 20 அடிக்கு ஒன்றாக நட்டால் சுமார் 120 பிள்ளைகளும் எக்கருக்குச்செல்லும். செடிகள் வாங்குவதைவிட நாமே நாற்றுவிட்டு வைப்பதே நல்லது.

பின்பருவம்.—தென்னம்பிள்ளைகள் வைத்து வேர் நன்றாய் ஊன்றும்தரையில் இரண்டு நாளைக்கு ஒரு தண்ணீரும் வேர் ஊன்றியபின் ஈரம் காப்பதற்குப் போதுமானபடி அந்தந்த இடங்களுக்குத் தக்கபடி வாரத்திற்கு இரண்டு தண்ணீரோ அல்லது ஒரு தண்ணீரோ இறைத்து வரவேண்டும். இப்படி ஐந்து வருஷங்கள் வரையில் இவைகளை அதி ஜாக்ரதையாய்க் காப்பாற்றவேண்டும். அதற்குப்பின் தண்ணீர் பாய்ச்ச வேண்டியதும் வேண்டாததும் அந்தந்த இடத்தைப் பொறுத்தது. கேவலம் வெறும் மணலாயில்லாத மற்றநிலங்களில் பிள்ளைகள் நட்ட இரண்டு அல்லது மூன்றுவருஷம் வரையில் காய்கறி, இஞ்சி, மஞ்சள், வெங்காயம் அல்லது சொற்ப தானியங்களைச் சாகுபடி செய்யலாம். இப்படிச் செய்வதால் பிள்ளைகளுக்குத்தண்ணீர் இறைக்கும் செலவு தள்ளிப்போவதோடு நிலமும் அடிக்கடி கிளறப்பட்டும் எருப்போடப்பட்டும் வருவதால் நிலம் மிகுந்த வளமாயிருக்கும். இப்படிப் பயிர்செய்யப் படாத இடங்களில் வருஷத்திற்கு இரண்டொரு முறையாவது நன்றாய்க்கொத்தி செடிகளுக்கு எருவிட வேண்டும். ஐந்து வருஷங்களுக்குப் பின்னால் ஒவ்வொரு வருஷத்திலும் மழைகாலத்தில் செடிகளைச் சுற்றி ஒவ்வொரு பக்கத்திலும் 4 அடி தூரத்திற்கு நன்றாய் ஆழக்கொத்தி வேர்களை அப்புறப்படுத்திவிட்டு தொழு எரு, சாம்பல், இலைச்சருகுகள், சபபாத்துக்கள்ளி, தோல்எரு, எலும்புத்தூள், உப்பு இவைகளில் எவை சுலபமாய் அகப்படுமோ அவைகளைப்போட்டு மழை ஜலம் வெளியே போகாதபடி பெரிய பாத்திகளாய்க் கட்டவேண்டும்.

சாதாரண ஜாதி தென்னைமரங்கள் நன்றாய் போஷிக்கப்பட்டு வந்தால் ஆறாவது வருஷம் முதல் காய்க்க ஆரம்பிக்கும். சரியானபடி பின் பருவம் செய்யாவிட்டால் பத்து பதினைந்து வருஷங்கள் வரையில் கூட காய்க்காது. பின் பருவங்களெல்லாம் சரியானபடி செய்து மரங்கள் கட்டையும் இலையுமாய் நின்றால், செடிகளுக்குக் கொழுப்பு அதிகமாயேறியிருக்கிறதென்று தெரிந்துகொண்டு மரங்களைச்சுற்றி ஆழமாய்க் குழிகள் தோண்டி அவைகளில் சரல் (Gravel) கொண்டுவந்து கொட்டி மண் போட்டு மூடிவிட வேண்டும். இப்படிச்செய்தால் கொழுப்பேறிய செடிகள் காய்க்கும்.

வயது.—தென்னை மரமானது 70 வருஷம் முதல் 100 வருஷம் வரையில் ஜீவித்திருக்கும். இருந்தாலும் 70 வருஷத்திற்குமேல் அது காய்ப்பது அபூர்வம். தென்னை மரத்தைச் சுற்றிலும் மட்டைகள் விழுந்த அடையாளங்கள் நன்றாய்த் தெரியும். ஆறு மாதத்திற்கொரு மட்டை விழுவதால் அவ்வடிக்களை எண்ணிப்பார்த்தால் மரத்தின் வயது தெரிந்து சொல்லலாம்.

மகசூல்.—ஒரு வருஷத்தில் ஒரு மரமானது 10 குலை தள்ளும். குலை யொன்றிற்குப் பத்துக்காய் முதல் 20 காய்கள்வரை காய்க்கும். 20 அடி தூரத்திற்கு ஒரு மரமாக நட்ட கணக்கையும் குறைந்தது குலைக்குப் பத்துக்காய்கள் அகப்பட்டதாயும் வைத்துக்கொண்டாலும் எக்கர் ஒன்றுக்கு 120 செடிக்கு செடி ஒன்றுக்கு நூறு காய்களாக வருஷத்திற்கு 12,000 காய்கள் அகப்படும். காய் ஒன்று 9-பைவீதம் குறைந்த விலையாகப் போட்டுக்கொண்டாலும் எக்கர் ஒன்றுக்கு ஐந்நூறு ரூபாய்க்கு அதிகம் அகப்படும். செலவு ரூபாய் இருநூறு போனாலும் எக்கர் ஒன்றுக்கு முன்னூறு ரூபாய் இலாபம் அகப்படும். நாம் மேலே சொல்லியபடி இதை வாசித்தவுடன் மறந்து போகாமல் சற்று இவ்விஷயத்தில் கவனம் செலுத்தி இலாபம் அடைவார்களென நம்புகிறோம்.

—கிருஷிகன்.

———(:-o-:)———

உ

## நாகபட்டினம் பக்திமார்க்கசபை.

நாகபட்டினத்தில் ம-ள-ள-ஸ்ரீ எஸ் சடையப்பிள்ளை யவர்களை அக்கிராசனாதிபதியாக வுடைய பக்திமார்க்க சபையின் முதல் வருஷத்தறிக்கைப் பத்திரம் ஒன்று வரப்பெற்றுப் பார்த்து மகிழ்ந்தோம். இச்சபையின் நோக்கம் "அன்பேசிவம்: அதுவே பொருள்" என்றுள்ள அன்புருவாய தெய்வத்தனிடம் பக்தியை விருத்தி செய்வதாம். அன்புருவாய தெய்வம் எப்படிப்பட்ட தெனில்,—

"அன்பெனுங் குடியுளகப்படு மலையே
அன்பெனுங் குடி புகுமரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம்பொருளே
அன்பெனுங் கரத்தமர முதே
அன்பெனுங் கடத்துள்ளடங்கிடுங் கடலே
அன்பெனு முயிரொளி ரறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபேரொளியே
அன்புரு வாம்பர சிவமே,"—

என்றதனல் விளங்கும். இந்த அன்புருவான தெய்வம் "அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளா"யிருத்தலால் அப்பரம் பொருளை யறிந்தனுபவிக்க "அன்பு செயல்" எனும் வழியன்றி வேறுவழி யில்லையாம். இவ்வழியை உளவறிந்து விர்த்திசெய்வதே "பக்தி மார்க்கமாம்" இந்த பக்திமார்க்கத்தை விர்த்தி செய்யும்பொருட்டு "நாமறிந்ததைப் பிறருக்கு எளிதிலறிவித்தலும், பிறரறிந்ததை நாமறிதலும், மனதிலறிந்த பொருளை வெளியிடும் சொல்வன்மையை விருத்தி செய்தலும், இதன் பொருட்டு தமிழ் ஆங்கில பாஷைகளினறிவை விருத்திசெய்வதும் இரண்டாவதுநோக்கம்" யுடையது இச்சபை. இதன் மூன்றும் நோக்கம் மேற்கூறியபடி 'எம்மதமும் சம்மதமே' யென்றறிதற் பொருட்டு நம் மதசாஸ்திரங்களையும் பிறமத நூல்களையும் ஆராய்வதாகும். இச்சபையில் "அன்பு" சீவகாருண்யம் என்பதை யங்கீகரிக்கும் எவரும் இதற்கு அங்கத்தினராவதற் குரியர். இச்சபைக்கு அக்கிராசனதிபதியால் ஒரு கட்டிடம் புதுப்பித்து விடப்பட்டிருக்கிறது.

———:-(o)-:———

## ஜாக்ரமே கர்மம் கர்மமே தேஹம்.

———:-:———

மனிதன் தினந்தோறும் ஜாக்கிரஸ்வப்ன சுஷுப்தி என்னும் மூவிதமான அவஸ்தைகளை அனுபவிக்கிறன். அப்படி அனுபவிக்கையில் விவகாராதி சம்சாரத்தின்கண் சாக்கிரமம் முழுமையும் அனுபவித்த ஜீவன் அலுத்துச் சலுத்து இவைகளில் சுகத்தைக்காணமல், எப்படி பக்ஷியானது அதிவேகத்தோடு கூட்டில் சுகமுண்டாகுமென படுக்கைக்கு ஓடுகிறதோ அப்படி ஜீவனும் புண்ணிய பாபத்தைப் புசிக்கும்பொருட்டு ஜாக்கிரத்திலும் சொப்பனத்திலும் சுழன்று கர்மமானது நாசத்தை அடைந்த காலத்தில் சுஷுப்தியை அடைகிறன். சுஷுப்தி சுகமென்பதற்கு 'நான் சுகமாக தூங்கினேன்' என்கிற ஜனங்களுடைய அனுபவமே பிரமாணமாக இருக்கிறது. தூக்கமில்லாத அவஸ்தையாம் சுஷுப்தி சுகமுள்ளது என்று கேட்கவேண்டியதில்லை. அப்படி சுக அவஸ்தையில் யாதொரு ஆனந்தமயன் இருந்தானே அவன் அதிலிருந்து வெளிக்கிளம்பினவுடன் ஸ்தான பேதத்தால் ஜாக்கிரத்தையாவது அல்லது சொப்பனத்தையாவது அடைகிறன். ஏனென்றல்,

"கர்மஜன்மாந்தரேபூத்யத்தத்யோகாத்பூத்யதேபுனஃ" ஜன்மாந்தத்தில் செய்த யாதொரு கர்மமுண்டோ அந்த சம்பந்தத்தால் மறுபடி விழித்துக்கொள்ளுகிறன்.

ஜீவன் நேத்திரத்தில் வரும்பொழுது ஜாக்கிரத்தையும் கண்டத்தி விருக்கும்பொழுது சொப்பனத்தையும் ஹிருதயகமலத்திலிருக்கும்போது சுஷுப்தியையும் அடைந்து ஜாக்கிரத்தில் தேகமுழுமையும் வியாபித்து சேதனன ஜீவன் ஜீவித்து இருக்கிறன்.

அப்படி சுகம் என்றும் துக்கம் என்றும் உதாசீன மென்றும் சொல்லப்பட்ட மூன்றுவிதமான அவஸ்தைகளை அடைந்த ஜீவன் புண்ணிய பாபங்களுக்குத் தகுந்தபடி பலன்களை அனுபவித்து தூங்கியும் விழித்தும் இப்படி காலத்தைக் கழிக்கிறன். புல்லாயும் பூண்டாயும் இருந்தநாள் போதாதோ என்று அனேக பெரியோர்கள் பாடியிருக்கிறர்கள். அப்பேர்ப்பட்ட ஜன்மாக்களை காட்டிலும் அறிவுள்ளதான மானிடப்பிறப்பை அடைந்தது ஓர் பெரும்பாக்கியமல்லவா. இந்த மானிட ஜன்மத்தை தவிர்த்து வேறுஜன்மாவை அடைந்தாலனல் ஞானத்தை அடைய அனர்கனகிறன். அயோக்கியதையுள்ள அச்சீவர்கள் மானிடப்பிறப்பை மிருகப் பிறப்பாகச் செய்து பிறப்பு இறப்பு என்னும் பந்தத்தில் சுட்டுண்டு சம்சார சக்கிரத்தில் சிக்கி சகிக்காதவர்களாய் சாகத்துணிய ஆசைமிக கொள்ளுகிறர்கள். மாயை யாரைவிட்டது! ஐயோபாவம்! வேஷம்போட்டுக்கொண்டு கூத்தாடுபவன்போல், விழிக்கிறதும் தூங்குகிறதுமாக இருந்து காலத்தைக் கழித்துக் காலனுக்கு அற்பிதம்செய்து எனது எனது என்று அபிமானத்தால் "எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணி மனம் புண்ணுகி" அகம்பிடித்து அவாமேலிட்டு அனர்த்தம் விளைவித்து அநாத்மபுத்தியால் தன்னை தூரவிலக்கி, யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்வதுபோல் தானே தன்னைத் தகாதவனகச்செய்து தர்க்கமென்னும் குதர்க்கவாதம் பேசி குய்யோமுறையோவென்று குழியில்விழுந்து கூக்குரலிட்டு கூண்டுவிட்டோடித் தேடியலைந்து தேகத்தைநாடித் தேங்கியழுது தபிக்கவும் செய்துகொண்டு அவித்தியாவாசனையினல் அழிவையும் அடைகிறன். இப்படி அதோகதியாக அடையும் ஜீவன் மனிதப்பிறப்பில் பிரஹ்மஞானத்தை அடைந்து ஆனந்தமான தேஜோமயத்தில் சேரவுமாட்டான். என் என்றல் பிராரப்தத்தால், இப்படி ஜீவன் மூன்று அவஸ்தைகளையும் தாண்டி அப்பாலுள்ள துரிய துரியாதீதமான அவஸ்தைகளை எட்டிப்பார்க்க சக்தியற்றவனய் சந்ததமும் சம்சாரத்தில சுற்றித்திரிந்து திக்பிரமைகொண்டு திகிலடைந்துதிகைத்துநிற்பன். முப்பாழும்தாண்டி அப்பால் நின்றவர்களுக்கு கண்கொள்ளாத காக்ஷியாம் திருநடனக் காக்ஷியைக் கண்டு கரைந்து உருகிக்கலந்து, காண்பான் காண்பொருள்சாக்ஷியென்னும் பேதமின்றி அதுவேயாகி ஆனந்தமயமாக இருப்பர் "அனுபவி" என்னும் மஹத்தான யோகிகள்.

வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர்.

———(:-:)———

## An Indian Journalist's Silver Jubilee.

(*From the Madras Mail of 11th May, 1911.*)

SIR,—I have been celebrating the Silver Jubilee of my career as a jouanalist and a worker in the cause of the diffusion of knowledge and enlightenment among the masses, in my own way, communing with the Holy Spirit and reflecting on the work of a quarter century of unceasing endeavour to stick to the ideal which moved me from within and gave me the necessary strength and courage to persist and persevere in the plan of work I have sketched out for myself, through thick and thin, working undaunted against innumerable odds. Will you permit me, Sir, on an occasion like this, to convey, through your columns, my heart-felt thanks and gratitude to all those who have stood by me in my hour of trial and encouraged me with their sympathy, support and literary help? My object from the very beginning was "to make an earnest attempt," as the *Madras Mail* of the 12th April, 1892, put it, in commending my scheme for the diffusion of knowledge, "to open the eyes of the educated Hindus to the condition of their less educated brethren and to share with the masses to some extent the advantages of education and refinement." My main endeavours, therefore, were concentrated in securing the co-operation of as many people in the cause as possible.

Some of the members of Committee have retired from their labours in India, a few have gone over to the majority and some at this moment are in high and responsible positions. Though for several years past, I have not, in obedience to my religious vow, had occasion to seek their support in any material way, yet the consciousness of their genuine sympathy and moral support has been a source of great inspiration to me to continue my work without turning my back. To all such good souls, including the successive Editors of the *Madras Mail*, allow me to tender my heartfelt thanks publicly through your columns. I cannot sufficiently express my indebtedness to the late Mr. L. C. Innes, I.C.S., to Mr. H. O. D. Harding I.C.S., to Dr. D. Duncan, to the late Dr. G. U. Pope, Miss E. A. Manning and several others whose names come crowding to my mind. I am also indebted to Mr. J. H. Stone for the moral support he gave me while I was struggling with the question of vernacular studies. I owe it to an I.C.S. member of my Committee for including "Relgion and Morality" within the scope of the Agency's work, which opened up a virgin field for the employment of all my physical and spiritual energies and my unbounded faith in the goodness of the divine order of things. My work has met with appreciation and encouragement on all sides, as you will see from the advance proof of my article on "My Silver Jubilee" in the *Virekachintamani*, winning for me royal approbations and the heartfelt thanks of Royalty through three generations. I mention this merely to show how the good will of so many good souls has sustained me and encouraged me during the most trying situations in life, which to me have been made a hundredfold more trying by the loss at a critical time, of my sweet partner. in life who was also the partner of my work.

But the secret of my success was not in the worldly rewards of my work, which to me were poor enough ; but it brought to me a compensation in the satisfaction of my own good conscience, which to me was more valuable and inspiring than anything else. Dr. D. Duncan writing to me in July, 1905, from his cosy retreat in Scotland, while engaged in his biography of Herbert Spencer said :—"It astonishes me to see your persistent devotion to what you regard as the truth. If you do not get much worldly reward, you have at least the satisfaction of a good conscience." Here, then, is the secret of my success such as has been vouchsafed to me by divine grace and the heavenly reward for my unstinted and unsparing work in the cause of truth, or if you please, "in what I regard as truth." I am reviewing my experience of the past twenty-six years as a prominent member (in work at least) of the vernacular Press and the ideal that moved me to work steadily for its realisation all these years.

My object in writing to yo now is, as I said, to enable me publicly to tender my thanks and express my gratitude to all who have helped me by thought, word or deed, and as these include persons of the highest standing such as Governors and High Court Judges or distinguished members of the Civil Service, down to the poor but earnest student of life who wished to contribute his mite to the cause of spreading knowledge and enlightement among the less educated of our brethren, I crave your permission and theirs to tender to them one and all publicly, through your columns, my heart-felt thanks on this the unique occasion of my Silver Jubilee.

C. V. SWAMINATHA IYER, K.S.S.A.

Secretary, D. K. Agency and Editor V. C.

Madras, 8th May.

---

*Harrowgate, 19th June 1911.*

"Dear Swaminathan,

Please accept my hearty congratulations on the appearance of the Silver Jubilee Number of the *Viveka Chintamani*, a copy of which I received last Mail.

Truly Yours, D. DUNCAN."

PRINTED AT THE SOUTH INDIAN PRESS, 18- LINGHI CHETTY ST., G. T. MADRAS.